டாக்டர்

# அம்பேத்கர்



மூலம்

ஒ.கே. நம்பியார்

மொழியாக்கம்

# டாக்டர்
# அம்பேத்கர்

## ஒரு வாழ்க்கைச் சித்திரம்

மூலம் :
பேராசிரியர், ஓ. கே. நம்பியார், எம்.ஏ. (ஆனர்ஸ்),
(ஆங்கிலப் பேராசிரியர், மைசூர் பல்கலைக் கழகம்,
பெங்களூர்)

மொழியாக்கம் :
திரு. எச். என். கிருஷ்ணசாமி, பி.ஏ. (ஆனர்ஸ்),
ஏ.எம்.ஐ.ஈ.டி. (லண்டன்)

பெங்களூர்,
1957.

# முன்னுரை

சமூக கட்டுப்பாடுகள் பல ஏற்பட்டுத்தனி மனிதனின் முன்னேற்றத்தை எத்துணை தடுப்பினும், சுய முயிற்சியாலும் மனத்திண்மையாலும் வாழ்க்கை வழிவகுத்து பெருமை பூணலாம் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியவர் டாக்டர் அம்பேத்கர். எனவே நாட்சுழலில் அகப்பட்டுத் திணறும் தாழ்த்தப் பட்டவருக்குக் கலங்கரை விளக்கமாகத்திகழும் டாக்டர் அம்பேத்கரின் வாழ்க்கைச் சித்திரம் வரைவதில் முனைந்தேன்.

இச் சிறு புத்தகத்தில் காணும் பல்வேறு விஷயங்கள், திரு. தனஞ்சய கேர் அவர்கள் எழுதிய டாக்டரவர்களின் வாழ்க்கை வரலாற்றினின்றும் எடுத்தாளப் பட்டவையாகும். முக்கியமாக, டாக்டரவர்களின் காலத்திய சமூக மற்றும் அரசியல் சூழ்நிலைகள் மிகச் சிறந்த முறையில் கையாளப்பட்டிருக்கின்றன. திரு. தனஞ்சய கேர் அவர்களுக்கு எனது நன்றி உரித்தாகும்.

என்து ஆங்கில மூலத்தினின்றும் தமிழாக்கம் செய்த திரு. எச். என். கிருஷ்ணசாமி, பி.ஏ. (ஆன்ர்ஸ்), ஏ. எம். ஐ. ஈ. டி. (லண்டன்) அவர்களுக்கு நான் மிகவும் கடமைப் பட்டவன். அவரது சிறந்த மொழியாக்கம் நல்ல வரவேற்பு பெருமென்பது எனது திண்ணம். இன்னல் பாராது என்னுடன் பலநாட்கள் ஒத்துழைத்த திரு. கிருஷ்ணசாமிக்கு எனது மனப்பூர்வமான நன்றி.

தாழ்த்தப் பட்டவர்களுக்காக பாடுபடும் குழுக்கள் மற்றும் இயக்கங்களுடன் தொடர்பு கொள்ளும் பாக்கியம் எனக்கு வெகுவாக கிடைத்துள்ளது. இப்புத்தகத்தை எழுதத்தூண்டிய எனது நண்பர்களுக்கு நன்றியறிதலை தெரிவித்துக் கொள்கிறேன்.

வாசக நண்பர்கள் இச் சித்திரத்திற்கு தரவிருக்கும் வரவேற்பு ஒரு மனத்துடையதாயிருக்கும் என நம்புகிறேன்.

மத்தியக்கல்லூரி,<br>
பெங்களூர்,<br>
1—9—1957.

ஒ. கே. நம்பியார்.

# ஒரு வார்த்தை

'போர்த்து கீசிய கடல் கள்ளர்களும் இந்திய மாலுமிகளும்' எனும் ஆங்கில புத்தகம் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் வெளியாகியது. சரித்திர ஆராய்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட இப்புத்தகம் உலக அறிஞர்களால் புகழப்பட்டது. கோவா சத்தியக்கிரகப் போராட்ட காலத்தில் வெளியாகிய இதனை போர்த்து கீசிய அரசாங்கம் தன்னுடைய நாட்டினுள் தடை செய்தது சரித்திர பேராசிரியர் சர்தார் கே. எம். பணிக்கர் முதற்கொண்டு பத்திரிகைகள் அனைத்தும் போற்றிய இப் புத்தகம் கன்னட மொழியிலும் வெளியாகியது. தற்சமயம் மலையாளத்திலும், தமிழிலும் மொழியாக்கப் பட்டுக் கொண்டிருக்கும் இவ்வருமையான எட்டினை ஆங்கிலத்தில் எழுதியவர், பேராசிரியர் ஓ. கே. நம்பியார். மைசூர் பல்கலைக் கழகத்தில் ஆங்கிலப் பேராசிரியாராக இருக்கும் திரு. ஓ. கே. நம்பியார், எம் ஏ. (ஆனர்ஸ்) அவர்கள் தாழ்த்தப் பட்டவர்களுக்காக பல் வேறு முறைகளில் தொண்டு புரிந்திருக்கிறார். ஷெட்டியூல்ட் வகுப்பினரின் மாணவர்களுக்கென ஒரு ஹாஸ்டலை நிறுவி அதன் வளர்ச்சியில் பாடுபட்டவர்களுள் தலைசிறந்தவர் ஓ. கே. நம்பியார். பரந்த மனப்பான்மையும், சிறந்த அறிவும் கொண்ட பேராசிரியர் அவர்கள், தாழ்த்தப் பட்டவரின் மிகச்சிறந்த தலைவர் டாக்டர் அம்பேத்கரின் வாழ்க்கை சித்திரம் வரைவதில் ஊக்கம் செலுத்தினார். அன்னாரது முயற்சி வெற்றிபெற்றது. ஆங்கிலத்தில் அவர் எழுதிய புத்தகத்தின் மொழி பெயர்ப்பே இச்சிறு புத்தகம். அவரது மூலச்சித்திரம் விரைவில் ஆங்கிலத்தில் வெளிவர இருக்கிறது.

மொழியாக்கம் எளிதல்ல. அதனைச் செய்வதற்கு திறமை வேண்டும். பேராசிரியரின் மாணவனாகிய என்னை இப்பணியில் ஈடுபடுமாறு ஊக்குவித்து, சந்தர்ப்பமளித்த திரு. ஓ கே நம்பியார் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டவன். எனது முன்னேற்றத்தில் வெகுவாக அக்கரை செலுத்திய ஆசிரியர்களுள், பேராசிரியர் நம்பியாரை முதலில் குறிப்பிடவேண்டும். எனது மொழியாக்கம் புலமை மிக்கதல்ல. இளைஞனின் முதல் மொழியாக்க முயற்சி. எனவே குற்றங்கள் காணப்படின், பொறுத்தருள வேண்டுகிறேன்.

பெங்களூர்,
1—9—1957.

எச். என். கிருஷ்ணசாமி.



பம்பாயில் டாக்டரவர்களின் பிரேத ஊர்வலம்



பெங்களூரில் இரங்கல் கூட்டம்

# 1

கொங்கண் பிரதேசத்தின் ரம்மியமான தொரு பகுதி ரத்னகிரி ஜில்லா. அந்த ஜில்லாவில் சிறியதும் சிறப்பும் மிக்கதோர் ஊர் மந்தன்காடு. மந்தன்காட்டை மடுத்து நின்றது அம்பாவடி கிராமம். ஆண்டாண்டு களுக்கு முன் பிருந்தே அம்பாவடியில் அடைக்கலம் புகுந்து வாழ்க்கை நடத்தியது மஹர் குடும்பம்.

ரத்னகிரியின் தாழ்த்தப்பட்ட வகுப்பினருள் எல் லாம், மஹர்கள் மட்டுமே முற்போக்கு கருத்து கொண் டவராயிருந்தனர். இயற்கை அவர்களுக்களித்த உட லும், சிந்தையும் தவிர, கிழக்கிந்திய கம்பெனியின் பம்பாய் படை மூலம் ஆங்கிலேயர்களுடன் அவர்கள் கொண்ட தொடர்பு, முற்போக்கு கருத்துக்களுக்கு வித்தூன்றியது. அன்று வரை மறுக்கப்பட்ட படிப்பு வசதிகள், படையில் சேர்ந்தோர்க்கு அளிக்கப்பட்டன கட்டாயக் கல்வி முறைகூட இயங்கவாரம்பித்தது. சூழ்நிலைக்குத் தக்கவாறு தங்களை அமைத்துக்கொள்ளும் மஹர்கள், ஐரோப்பிய வழக்கு முறைகளின் வாயிலாக, சுதந்திர உணர்ச்சியை வளர்த்துக் கொண்டனர். படை யின் மூலம் அவர்களுடைய வீரமும், மக்கட் தலைவனுக வேண்டிய உணர்சிகளும், தோன்றலாயின.

இந்தப் பிரதேசத்தில் ஆதி நாளில் குடியேறிய ஆரிய முன்னோர்களின் வழி வந்தவர் மஹர் வகுப் பினர், என்று சொல்லப்படுகிறது. அம்பாவடியின் மஹர் வகுப்பினருள் அம்பேத்கர் குடும்பம் முக்யத்வம் பெற்று திகழ்ந்தது. வருடாந்திர விழாக்களில், கிராம

தெய்வத்தைச் சுமந்து செல்லும் பல்லக்கு, இக்குடும்பத்தினரின் பாதுகாப்பில் தான் இருந்தது.

வாலிபப் பருவத்தில் படையில் சேவை புரிந்து, ஓய்வு பெற்று வாழ்க்கை நடத்தி வந்தார் மலோஜி சக்பால். அம்பாவடி கிராமத்தில் இவருடன் வாழ்ந்தவர்கள், ராம்ஜி என்றதோர் மகனும், மீரா என்றதோர் மகளும். இவர்கள் தீவிர மதப்பற்றுடையவர்கள். பக்தி பூஜை முறையில் ஊறித் திளைந்து, கடவுளிலும் அவன் செயலிலும் நம்பிக்கை யுடையவர். அந்த காலத்தில் பக்தி பூஜை முறையை வழக்குக்குக் கொண்டு வந்தவர் கவிஞர் கபீர். மதவேறுபாடுகளை அகற்றி, ஆத்மசுத்தி அனைவருக்கும் பொது என்று உபதேசித்த கபீர் மகானின் பூஜைமுறை தாழ்த்தப்பட்ட வகுப்பினரை வெகுவாகக் கவர்ந்தது. இந்து மதம் வணங்கும் இராமனும் கிருஷ்ணனும் தான் பக்தி பூஜை முறையோரின் தெய்வங்களாகத் திகழ்ந்தனர்.

தந்தை காட்டிய வழியில் நடந்த, ராம்ஜி சக்பால், படையில் சேர்ந்தார். உழைப்பாலும் ஊக்கத்தாலும் சுபேதார் மேஜர் பதவியை வெகு சீக்கிரம் எட்டிப் பிடித்துவிட்டார் ராம்ஜி. தந்தையிடமிருந்து இவர் கற்றுகொண்ட மற்றுமோர் பழக்கம்—தீவிர மதப் பற்று. காரிசன் பள்ளியில் உபாத்தியாயர் தொழில் பார்த்த சுபேதார் மேஜர் கால அட்டவணைக்கு மீறி பிரார்த்தனைகள் செய்ததால் பலமுறை இரும்புக் கிராதிகளின் பின்னால் நின்று பிரார்த்தனை செய்ய நேரிட்டதாகக் கூறப்படுகிறது.

ராம்ஜி குடிமறுத்தவர். மற்றும் புலால் வெறுத்

தவர். சாதாரணமாக தாழ்த்தப்பட்டோருள் புலால் மறுத்தவரைக் காண்பதறிது. ராம்ஜி இந்த விதிக்கு விலக்காக நின்ருர். தன் சுகத்திற்காக மட்டுமன்றி தன்னைச் சான்ருேர் நலனுக்காகவும் பாடுபட்டார் அவர். தாழ்த்தப்பட்டவரின் சில குறைகளை நிவர்த்திக்க வேண்டுமென்று, பம்பாய் கவர்னரை பேட்டிகண்ட பெருமை ராம்ஜியைச் சாரும். மற்ருேர்முறை, மஹார்கள் படையில் சேரக்கூடாது என்ற தடையை கண்டித்து குரல் எழுப்பினுர் அவர்.

ராம்ஜி நல்ல விளையாட்டுப் பந்தயக்காரர். கிரிகெட் மற்றும் கால்பந்து விளையாட்டுக்களில் பேரும் புகழும் பெற்ருர். சமூக நலனில் அவர் செலுத்திய ஆர்வம், மஹாத்மா பூலே மற்றும் ரானடே போன்ற பெரியார்களின் தொடர்பை பெற்று கொடுத்தது.

தாணு ஜில்லாவில் வாழ்ந்த முர்பத்கார் குடும்பத்தில் தோன்றிய பீம்பாய் என்னும் அழகுப் பெண் மணியை மணந்தார் ராம்ஜி சக்பால். பீம்பாயின் தந்தையும், ஏழு மாமன்மார்களும் கூட படையில் சுபேதார் மேஜர்களாக இருந்தனர். இவர்கள் குடும்பமும் கபீரின் கருத்துக்களில் நம்பிக்கை வைத்திருந்தது.

பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் காணும் தாழ்த்தப் பட்டோரிடையே இருவித அவா ஏற்படுவது கண்கூடு. சமூகத்தில் உயர்நிலை அடைய வேண்டும் என்னும் அவா; மதத்துறையில் தங்கள் கருத்துக்கள் வளர்ச்சி பெறவேண்டும் என்னும் அவா. சமூக வாழ்வில் ஏற்றமடைவதை தடுக்கும் இந்து மதத்திலிருந்து பிரிந்து வேறு மதங்களைத் தழுவும் தாழ்த்தப்

பட்டோர் அநேகம். சாதாரணமாக, பொருளாதார நிலையேதான் இத்தகைய மத மாற்றல்களுக்கு காரணம். எனவே, பொருளாதார கஷ்டங்களுக் குட்படாத தாழ்த்தப்பட்டோர், எளிமையும் ஏற்றமும் கொண்ட கபீரின் 'பக்தி பூஜை முறை' யை கடைபிடித்தனர் சரித்திரம் செப்பும் இந்த உண்மையை மறக்கவோ மறுக்கவோ முடியாது.

ஒரு நாள் 'மோள' என்னும் ஊரில் ராம்ஜி சக்பால் தனது மாமனைச் சந்தித்தார். சிறுவயதில் வீட்டை விட்டே ஓடிச்சென்றிருந்த மாமன், ஒரு சன்யாசியாக திரிந்து கொண்டிருந்தார். எதிர்பாராத இச் சந்திப்பு, ராம்ஜி மாமனுக்கு விடுத்த அழைப்பில் முடிந்தது. வீடு வர வேண்டுமென்ற அன்பு அழைப்பை ஏற்று கொள்ள மறுத்துவிட்டார் ராம்ஜியின் மாமன். துறவு பூண்ட சன்யாசிகளுக்கு வீடு தேவையில்லை. அவர்கள் விரும்புவது பெரும் வீடு. எனவே, மருமானின் வேண்டுதலை மறுத்து, விடை பெற்றுகொண்டார் மாமன். போகும் போது அவர், ராம்ஜிக்கு கூடிய சீக்கிரம் ஒரு ஆண்மகன் பிறப்பானென்றும், அவன் உலகு போற்றும் பெருமகனாக வளர்வானென்றும் ஆசி கூறி, சென்றார். 1891 வருஷம், ஏப்ரல் மாதம் 14-ம் தேதியன்று, ராம்ஜிக்கும், பீம்பாய்க்கும் ஒரு ஆண் மகன் பிறந்தான். அவர்களுடைய பதினான்கு குழந்தைகளுள் கடைகுட்டியாகப் பிறந்த இந்தச் சிங்கக் குட்டிக்கு, மகாபாரத வீரன் பீமனின் பெயரைச் சூட்டினர், பெற்றோர்.

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக பீம் வளர்ந்தான்.

பீமுக்கு ஆறு வயது நடக்கும் போதே அவனுடைய தாய் மறைந்து விட்டாள். அவளுடைய பதினுன்கு குழந்தைகளுள் ஐந்து குழந்தைகள் தான் உயிர் வாழ்ந்தன. அத்தை மீராபாயின் அரவணைப்பில் வளர்ந்தன ஐந்து குழவிகளும். அத்தையின் செல்லப் பிள்ளையாக வளரும் வாய்ப்பு கடைகுட்டி பீமுக்கு வாய்த்தது.

நித்தமும் பூஜை, பக்திப் பாடல்கள், என்று தெய்வ பக்தியிலேயே வளர்ந்தனர் சிறுவர்கள். ராமாயணமும் மகாபாரதமும் பாராயணம் செய்யப் பட்டன. துகாராம், மோரோபந்த், முக்தேஸ்வர் ஆகியோரின் மராட்டிய பஜனைகள் நாள் தவருமல் நடந்தன. மீராபாய் பஜனைப் பாடல்களை பக்திப் பரவசத்துடன் பாட, சிறுவர்கள் மெய்மறந்து போயினர்.

'எண்ணும் எழுத்தும் கண்ணெனப' எனும் முதுமொழியை நன் கறிந்தவர் ராம்ஜி சக்பால். செல்வத்துள் எல்லாம் கல்வியே தலை சிறந்த செல்வம் என்பது அவரது கருத்து. எனவே தம் குழந்தைகளுக்கு கல்வி புகட்ட எண்ணி, தாமே அச்செயலை மேற்கொண்டார். மராட்டி, ஆங்கிலம் மற்றும் கணக்கு பாடங்களைப் போதித்தார். 1901 வருஷத்தில் படையை விட்டு ஓய்வு பெற்றதும் தபோலி நகரத்திற்கு வீடு மாறினுர் அவர். அங்குதான் ஐந்து வருஷத்திய பீம் மராத்தி பள்ளியில் சேர்ந்தான். சில நாட்கள் கழித்து, சதாராவில் ராம்ஜிக்கு வேலைகிடைத்தது. பீம் இங்கு இருந்த ஆரம்பப் பள்ளியில் படித்துத் தேர்ச்சிபெற்று இடைநிலைப்பள்ளி புகுந்தான்.

---

சதாராவில் இருக்கும் போதுதான் பீம், தீண்டாமைப்பேயின் பிடியில் முதல் முதலில் சிக்கினன். அன்று அவன் பட்ட துன்பமே, பின்னர் அவனை தீண்டப்படாதோர் வாழ்க்கையைச் சீர்படுத்தத் தூண்டியது. ஒரு நாள் பீமும் அவனது மூத்த சகோதரனும் கர்கானுக்குப் புறப்பட்டனர், தந்தையைச் சந்திக்க. அதற்காகவென ஒரு மாட்டு வண்டியை வாடகைக்கு அமர்த்தினர்கள். கொஞ்சதூரம் செல்வதற்குள்ளாகவே, வண்டிக்காரன், தனது வாடிக்கைகாரர்கள் தாழ்த்தப் பட்டோர் என்று தெரிந்து கொண்டான். கட்டுக்கடங்கா கோபத்துடன் அவன், அச்சிறுவர்களை வண்டியை விட்டு கீழிறக்கினன். ஆனல் வெள்ளையப்பனின் உதவியால் சிறுவர்கள், வண்டிக்காரனின் தயக்கத்தை ஒழித்துக் கட்டினர். பேசிய சத்தத்திற்கு இருமடங்கு தொகையைப் பெற்றுக் கொண்ட வண்டிக்காரன், அவர்களை வண்டியில் அமர்த்தி, வண்டியின் பக்கலில் நடந்து வந்தான்! காரணம், அவர்களுடன் கூட ஏறி வர அவன் விரும்பவில்லை! வழிநெடுக சகோதரர் இருவரும் தாகத்துக்குத் தண்ணீர்கூட குடிக்க முடியவில்லை. உயர் ஜாதியினரின் கிணற்றடியிலிருந்து விரட்டப்பட்ட அவர்கள், அழுக்கு நிறைந்த குட்டைகளில் நீர் பருக விரும்பவில்லை.

ஜாதிப் பேயின் வெறியாட்டம் பீமின் முதுகின் மீது சாட்டை அடிபோல் விழுந்து துன்புறத்தியது.

நாவிதன் கடையில் பீமுடைய தலைமுடி வெட்டப்படவில்லை. நாவிதனின் கருவிகள் அசுத்தமாகிவிடுமாம். தன்மானம் கொண்ட பீமுக்குச் சினம் பொங்

கியது. ஆனால் அவனால் என் செய்ய முடியும்? அவனுடைய தலை முடியை அவன் சகோதரிகளே வெட்டினர், பார்ப்போர் ஆச்சரியப் படுமளவு, நன்றாக!

பள்ளிக்கூடத்தில் அவனுக்கு அந்தணர் குல உபாத்தியாயர்கள் கிடைத்தனர். அவர்களில் பலர் அவனுடன் மிக அன்புடனும் நன்மையுணர்ச்சியுடனும் பழகினர். ஆயினும் பள்ளி வழக்குப்படி, பீமும் அவன் சகோதரனும் மற்ற மாணவர்களுடன் பெஞ்சின் மீது அமர அனுமதிக்கப் படவில்லை. அவர்களிருவரும் மூலையொன்றில், பாய் மீது அமர்ந்து பாடம் படித்தனர்.

பீமிடம் மிக அன்புடனும் ஆதரவுடனும் பழகிய அந்தண உபாத்தியாயர் ஒருவருடன் அவன் பெருமதிப்புடனும், மரியாதையுடனும் பழகினான். வாழ் நாள் முழுதும் அவரை அவன் மறக்கவேயில்லை.

பிடிவாதமும், மனத்திடமும் பீம் கூடப் பிறந்த குணங்கள். தன்னால் எதுவும் செய்ய முடியும் என்று நண்பர்களுக்கு அறிவுறுத்து தற்காகவே, கொட்டும் மழையில் பள்ளிக்கு நடந்து சென்றானும் பீம்!

பள்ளியில் அவன் சாதாரண மாணவனாகத்தான் இருந்தான். அவனுடைய தந்தை வெகு நாட்கள் வரை மறுமணம் செய்து கொள்ளவில்லை. பின்னர் திடீரென்று மறுமணம் செய்து கொண்டார். பீம் விவரிக்க முடியாததோர் விதத்தில் தன் சித்தியை வெறுத்தான். வீட்டை விட்டு ஓடிவிட வேண்டுமென்று அவன் சிந்திக்காத நாட்களே கிடையாது. ஏழை மகராஷ்டிரியர்களுக்குப் பேரின்பவீடாகக் காட்சி தந்த பம்பாய் பட்டணம் செல்ல அவன் விரும்பினான். அதற்காக

வென, தன் மாமியின் பணப்பையைத் திருட மூன்று முறை முயற்சி செய்தான் பலன் கிட்டவில்லை. நான்காவது தடவை, மாமியின் பணப்பை அவன் கையிலிருந்தது! ஆனால் என்ன துரதிருஷ்டம்! பணப்பையிலிருந்ததெல்லாம் அரையணு தான்! ஏமாற்றமடைந்த பீம் அன்றிலிருந்து மாறி விட்டான். நன்றாக படித்து, சொந்த முயற்சியால் முன்னுக்கு வரவேண்டும் என்ற தீர்மானம் அவன் உள்ளத்தைப் பூரணமாக மாற்றிவிட்டது.

சில நாட்களில் அம்பேத்கர் குடும்பம் பம்பாய்க்கு இடம் மாறியது. கீழ் பரேல் (Lower Parel) எனும் பம்பாய் தொழிற் பகுதியில் குடி புகுந்தனர் அம்பேத்கர் குடும்பத்தினர். பீமின் சகோதரிகளுக்கு ஏற்கனவே மணமாகி விட்டிருந்தது. அவர்களும் கூட பம்பாயில் வாழ்க்கைப் பட்டிருந்தனர். சகோதரர்கள் மகராஷ்டிர பள்ளியில் சேர்ந்து படிக்கலாயினர். பீமுக்குத் தந்தையின் முழு உதவியும் கிடைத்தது. அவனுக்குப் புத்தகங்கள் முதலான வாங்கிக் கொடுப்பதற்கென, அவன் சகோதரிகள் தங்கள் நகைகளைக் கழட்டி கொடுத்துதவினர். பீம் நன்றாக படித்து விரைவில் எல்பின்ஸ்டன் உயர் நிலைப்பள்ளி புகுந்தான். பம்பாயிலேயே மிகச் சிறந்த பள்ளிகளுள் ஒன்று எல்பின்ஸ்டன் உயர்நிலைப் பள்ளி.

அவர்களுடைய ஒரே அறை வீட்டில், சமையலறை பாத்திரங்கள், ஆடுகள், மற்றும் பலவித சாமான்கள் நடுவில் இரவு வெகு நேரம் வரை மண்ணெண்ணை விளக்கொளியில் படித்தான் பீம்.

எல்பின்ஸ்டன் பள்ளியிலும் கூட ஜாதிமத வேறுபாடுகள் மிகுந்து காணப்பட்டன. ஒரு நாள், கணக்கு போட, பீமை கரும் பலகைக்கு வர வழைத்தார் உபாத்தியாயர். ஆனால் அவன் அதை நெருங்கு முன்னர், வகுப்பில் ஒரே கூக்குரலாகி விட்டது. உயர் ஜாதியைச் சேர்ந்த மாணவர்கள், தங்கள் சிற்றுண்டி பொட்டலங்களைக் கரும்பலகை பின் வைத்திருந்தார்களாம். பீம் அவற்றை நெருங்கி விட்டால் அவை அசுத்தமாகி விடுமாம். விஷயம் பெற்றோர்களை எட்டியது. பள்ளி அதிகாரிகளுக்குப் புகார்கள் வந்தன. ஒரு ஆசிரியர் பீமை, படிப்பு நிறுத்திவிட சொன்னாராம். ஆனால் பீம் அவரை மிகப் பணிவுடன் தம்முடைய வேலையை மட்டும் கவனித்தால் போதுமென்று சொல்லிவிட்டான். பரேல் தொழிற்சாலைகளில் வேலை பார்த்த அவன் நண்பர்கள், பீமுக்குப் பகல் சாப்பாட்டைக் கொண்டு வந்தனர். பள்ளி விடுமுறை நாட்களில், இந்த உதவியை பீம் அவர்களுக்குத் திருப்பிச் செய்துவிடுவான். பரேலில் அவன், தொழிலாளிகள் வாழ்க்கையையும் அவர்கள் பிரச்சினைகளையும் நன்கு அறிந்து கொண்டான்.

பீமும் அவன் சகோதரனும் பள்ளியில் சம்ஸ்கிருதம் படிக்கவிரும்பினர். ஆனால் தீண்டா தோராகிய அவர்கள் தேவ மொழியைக் கற்க அனுமதிக்கப்படவில்லை. பாரசீக மொழியைக் கற்க ஆரம்பித்த பீம், தனது பிற்கால வாழ்வில் சொந்த முயற்சியால் சம்ஸ்கிருதம் பயின்றான். டாக்டர் அம்பேத்கர் ஆரியமொழிப் புலவராக திகழ்ந்ததைச் சரித்திரம் செப்பும்.

சகோதரர்கள் இருவரையும் படிக்க வைக்க முடி

யாது திணறினர் ராம்ஜி சக்பால். எனவே மூத்தவனும் வேலை செய்ய வேண்டியதாயிற்று. இளையவன் முன்னேற்றமே கருத்தாகக் கொண்ட அவன், வேலையில மர்ந்தான். தந்தை, தமையன், சகோதரிகள், ஆகியோரின் அன்பிலும் உதவியிலும் பீம் பள்ளி படிப்பை வெற்றிகரமாக முடித்துக் கொண்டான்.

1907 வருஷம் பீம் மெட்ரிக் பரீட்ச்சையில் வெற்றி கண்டான். மஹர் வகுப்பிலேயே மெட்ரிக் பரீட்ச்சை தேறிய முதல் சிறுவன் பீம். ஒரு பெரிய விழாவே ஏற்பாடாகியது, இவ்வெற்றி குறித்து. திரு. எஸ். கே. போல், எனும் பிரபல மகாராஷ்டிர சமூகத் தொண்டர் தலைமையில் விழா நடந்தேறியது. திரு. கே. ஏ. கிலுஸ்கர், என்ற மற்றுமோர் சமூகத் தொண்டர், பீம்ராவ் அம்பேத்கருக்கு ஒரு புத்தகத்தை பரிசளித்தார். கிலுஸ்கர் எழுதி வெளியான புத்தம் புதிய அப்புத்தகத்தின் பெயர், "கௌதம புத்திரின் வாழ்க்கைச் சித்திரம்," என்பதே.

சுபேதார் ராம்ஜி சக்பால், ஆனந்த மிகுதியால் அன்றே ஒரு தீர்மானம் செய்தார். எப்பாடு பட்டாகிலும் தனது மகனை, மேற்படிப்புக்கு அனுப்பவேண்டும் என்பதுவே அந்தப் புனிதத் தீர்மானம்.

உடனடியாக ராம்ஜி சக்பால் மேற்கொண்ட செயல், தன் மகனுக்கு ஏற்றதொரு இளம் மணப் பெண்ணைத் தேர்ந்தெடுத்த தேயாகும். தபோலியில் போர்டராக இருந்த ஒருவரின் ஒன்பது வயது பெண் ரமாபாய், தந்தை ராம்ஜியின் கண்களில் சிக்கினள். அந்த காலத்தில் சிறு வயது-கல்யாணம் ஒரு வாழ்க்கை

விதியாகவே கருதப்பட்டு வந்தது. உயர்குல அந்தணன் முதல் தாழ்குல பஞ்சமன் வரை, அனைவரும் சிறு வயதிலேயே திருமணம் புரிந்துகொள்ள விழைந்தனர்

பம்பாயில் தீண்டப்படாதோர் திருமணம் செய்வதற்கான விசாலமான கல்யாண மண்டபம் இருக்கவில்லை. எனவே, பீம்ராவ் அம்பேத்கரின் திருமணம், பைகுல்லா மார்க்கெட்டில், சந்தடியற்ற இரவு வேளையில் நடந்தேறியது !

மேலை நாட்டு படிப்பும், கலாச்சாரமும் கிரிஸ்துவ மிஷின் பாதிரியோர் வாயிலாக இந்தியாவில் பரவ ஆரம்பித்தது. தாழ்த்தப் பட்டோரின் தன்மான உணர்ச்சி தட்டி எழுப்பப்பட்டது. தீண்டாமையை ஒழித்துச் சமத்துவம் நிறுவ வேண்டிய கடமையை உணர்ந்த சில சீர்த்திருத்தவாதிகள் தங்கள் கருத்துக்களைப் பிரசாரம் செய்ய வாரம்பித்தனர். தீண்டப்படாதோர் வகுப்பிலிருந்தே இரண்டு சீர்த்திருத்த வாதிகள் தோன்றினர். சிவராம் ஜன்ப கம்பல் எனும் மகாராஷ்டிர தலைவர், அகில இந்திய தீண்டப்படாதோர் மாநாட்டை முதன் முதலில் கூட்டினர். 'சோமவம்சிய மித்ரா' எனும் பத்திரிகையை நடத்தி ஆங்கிலேய அரசாங்கத்திற்குப் பலமுறை தம் குலத்தவர் சார்பில் மனுக்கள் வரைந்தார். தம் குலத்தவர் படும் வேதனைகளை எடுத்துரைத்து நீதி வேண்டினர். கர்ம வீர் ஷிந்தே எனும் மற்றுமோர் தலைவர் ஆக்ஸ்போர்டு (Oxford) பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்ற சமூகநல ஊழியர். இவர் முதன் முதலில் 'இந்திய தாழ்த்தப்பட்டோர் மிஷன்' எனும் சங்கத்தை ஆரம்பித்து தம் குலத்தவர் நன்மைக்

காகவும் முன்னேற்றத் திற்காகவும் பாடுபட்டார். கோகலே ஆரம்பித்த 'இந்திய ஊழியர் சங்கம்' (Servants of India Society) கூட, இச்சேவையில் கருத்து செலுத்தியது.

பீம்ராவ் அம்பேத்கர் எல்பின்ஸ்டன் கல்லூரியில் சேர்ந்தார். இண்டர்மீடியட் பரீட்சை தேரியதும், அவருடைய தந்தை மேலே படிக்கவைக்க ப்பண வசதி யின்றி தவித்தார். பல விதங்களில் உதவி புரிந்து வந்த திரு. கிலுஸ்கர், பீம்ராவ் சார்பில், பரோடா மகாராஜா சய்யாஜி ராவ் கெய்க்வாத் அவர்களை அணு கினர். படிப்பில் அக்கறை செலுத்தும் ஏழைச் சிறு வனுக்கு உதவவேண்டு மென்று விண்ணப்பித்துக் கொண்டார். மகாராஜா, பீம்ராவை சந்திக்க ஒப்புக் கொண்டு, இளைஞனுக்குப் பேட்டியும் அளித்தார். கேட்ட கேள்விகளுக்குப் 'பட்பட்' டென்று விடை பகர்ந்த இளைஞனை பாராட்டிய மகாராஜா, பீம்ராவுக்கு மாதம் இருபத்தைந்து ரூபாய் உபகாரச் சம்பளம் வழங்கினர். இந்த உதவியும், எல்பின்ஸ்டன் கல்லூரி பேராசிரியர் முல்லர் துரையின் உதவியும், பீம்ராவுக்குத் துணிமணிகள், புத்தகங்கள் வாங்க ஏதுவாயின.

கவலைகள் ஏதுமின்றி படிப்பில் கவனம் செலுத் தினன் பீம்ராவ். இச்சமயத்தில் அவன் குடும்பம் இரண்டு அறை கொண்ட புதிய இடத்திற்கு மாறி யிருந்தது. இரவும் பகலும் சிரத்தையுடன் படித்த பீம்ராவ், 1912 ஆண்டில் பி. ஏ. பட்டம் பெற்றுர்.

பட்டம் பெற்றதும் பரோடா படையில் லெப் டினன்ட் பதவி ஏற்றுர் பீமராவ். தனது அன்ன

வின் படையில் சேவை செய்வதை பெரும் பாக்கிய மாகவே கருதினர் அவர். ஆனல் ராம்ஜி சக்பால் தனது மகனை விட்டுப்பிரிய மனமில்லாது படுத்த படுக்கை யாகிவிட்டார். வேலையேற்ற பதினைந்து தினங்களுள், அவருக்கு ஒரு தந்தி வந்தது. தந்தை ராம்ஜி சாகக்கிடக் கும் செய்தி கேட்டு, தனயன் ஓடோடி வந்தார். சூரத் நகரில் தந்தைக்குத் தின்பண்டங்கள் வாங்க இறங்கி, ரயிலைத் தவறவிட்டார். மறுநாள் அவர் பம்பாய் வந்த போது. தந்தை வெகு மோசமான நிலையிலிருப்பதைக் கண்ணுற்று மனம் வருந்தினர். மகன் என்பதை உணர்ந்து, அவனைத் தழுவி, இரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்பினர் ராம்ஜி சக்பால்.

சுபேதார் ராம்ஜி சக்பால், பிப்ரவரி இரண்டாம் தேதி, 1913 வருஷம், மறைந்துவிட்டார். பீம் ராவ் அம்பேத்கரின் உள்ளம் துயர மிகுதியால் இரும்பென கனத்தது.

தந்தை மறைந்து நான்கு மாதங்களுக்குப் பின், பீம் ராவுக்கு பரோடா அரசாங்க கல்வி இலாக்காவி லிருந்து கடிதம் வந்தது. அதில் பீம் ராவ், அமெரிக்க கொலம்பியா சர்வகலா சாலையில் படிக்க, உபகாரச் சம்பளமளிக்க பரோடா அரசாங்கம் தீர்மானித்திருக் கும் செய்தி இருந்தது. மீண்டும் பரோடா மன்னர், பீம் ராவுக்காக வசதி செய்து கொடுத்தார்.

1913 வருஷம் ஜுலை திங்கள், நியூயார்க் நகரத்தில் வந்திறங்கினர் பீம் ராவ். ஹார்ட்லே ஹாலில் (Hartley Hall) தங்கி இருந்து, பின்னர் காஸ்மோ பாலிடன் கிளப் (Cosmopolitan Club) பிற்கு இடம் மாறினர்.

கொலம்பியா வாழ்க்கை அம்பேத்கரின் கண்களைத் திறந்துவிட்டது. அமெரிக்காவில் தீண்டாமை இருக்கவில்லை. தாழ்த்தப் பட்டவன் என்ற சிறுமை மனப்பான்மை இருக்கவில்லை. எனவே தாய் நாட்டைவிட, அமெரிக்காவில் தான் அம்பேத்கர் தமது நாட்களை சந்தோஷமாகக் கழித்தார். வாழ்க்கையில் சமத்துவம் காண்பதே மனித நாகரிகத்தின் அடிப்படை எனும் உண்மை உணர்ந்தார் அவர். இந்த உணர்ச்சி, தாய் நாட்டில் தவிக்கும் தம் குலத்தவரை மீட்கும் திருப்பணியை மேற்கொள்ள வேண்டும் என்று ஊக்கியது.

கொலம்பியாவில் அரசியல், தத்துவம், ஆந்த்ரோபாலஜி, பொருளாதாரம், ஆகிய வற்றைப் படித்துத் தேர்ச்சி பெற்றார். "பழங்கால இந்திய வர்த்தகம்" எனும் அவரது ஆராய்ச்சிக் கட்டுரைக்கு, 1915ல் எம்.ஏ. பட்டம் வழங்கப்பட்டது. இந்திய நாஷனல் டிவிடெண்ட் (National Dividend of India) எனும் பொருள் பற்றி அவர் செய்த ஆராய்ச்சி அவருக்கு டாக்டர் பட்டம் பெற்று கொடுத்தது. இந்த ஆராய்ச்சிக் கட்டுரை புத்தக வடிவில் வெளியானதும் அப்புத்தகம் பரோடா மகாராஜாவுக்குச் சமர்ப்பணம் செய்யப்பட்டது. அம்பேத்கர் அமெரிக்காவில் இருக்கும்போது தான், பிரபல நீக்ரோ தலைவர் புக்கர் டி. வாஷிங்டன் மறைந்து விட்டார். புக்கர் வாஷிங்டன், நீக்ரோ வர்கத்தினருக்குச் செய்த சேவைகளை இந்தியாவில் தாமும் செய்தல் வேண்டும் என்று எண்ணினார் அம்பேத்கர். தீண்டாமையையும், மற்றும் சமூக கட்டுப்பாடுகளை தகர்க்க கங்கணம் கட்டிக்கொண்டார்.

1916 வருஷம் ஜூன் மாதம், அமெரிக்காவை விட்டுப் புறப்பட்டார் அம்பேத்கர். லண்டன் மகா நகரில் அவர் வந்திறங்கிய போது, முதல் உலக யுத்தம் ஆரம்பமாகி நடந்து கொண்டிருந்தது. பிரிட்டிஷ் இரகசிய போலீஸ் படை முதலில் அவரைச் சந்தேகித்தது. இதனால் அவர் சில இன்னல்களுக்காளாக நேரிட்டது. கிரேஸ் இன் (Gray's Inn) னில் சேர்ந்து சட்டம் படிக்கலானார். டி. எஸ். ஸி. பட்டத்திற்கு அவர் படிக்கையில், பரோடா அரசாங்கம் அவரைத் திருப்பி அழைத்துவிட்டது. உபகாரச் சம்பளத் தவணை முடிந்துவிட்டதே இதற்குக் காரணம். அடுத்த நான்கு வருஷங்களில் மீண்டும் அவரை வெளி நாட்டுக்கு அனுப்புவதாக வாக்களித்தது அரசாங்கம்.

1917 வருஷம் ஆகஸ்ட் 21ம் தேதி அம்பேத்கர் இந்தியா திரும்பினார். கடல் பிரயாணம் மிகவும் பயங்கரமாக இருந்த காலமது. பகைவர்களின் சப்மரீன்கள் ஆங்கிலேய கப்பல்களைக் கவிழ்த்திச் சேத மேற்படுத்தின. அம்பேத்கர் பிரயாணம் செய்த கப்பலுடன் கூடவே புறப்பட்ட மற்றுமொரு கப்பல் மூழ்கடிக்கப்பட்டது. அதில் வந்த அவருடைய பெட்டி படுக்கைகளும் மூழ்கின.

கணவன் மேல் நாடுகளில் காலங் கழிக்கையில், தாய் நாட்டில் ரமாபாய் மிகவும் கஷ்டப்பட்டார். கணவனின் நல் வாழ்க்கைக்குத் தினமும் கடவுளை வேண்டினார். அவரது முதல் குழந்தை இறந்து போன துக்கம் அவர் துன்பத்தை அதிக மாக்கியது. வாழ்க்கையில் கண்ட எல்லா துன்பங்களையும் வீரத்துடன்

எதிர்த்துப் போராடினுர். நாடு திரும்பும் லட்சிய வாதியை வரவேற்று, அவரது பெரும்பணியில் பங்கு பெற தயாராகி நின்ருர் ரமாபாய்.

---

## 2

மேல் நாட்டுப் படிப்புக்குப் பின்னர் தாய் நாடு திரும்பிய டாக்டர் அம்பேத்கருக்கு வரவேற்பு விழா ஒன்று நடத்தி கௌரவிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனுல் தற்பெருமைக் காரன் என நினைத்து விடுவரோ வென்ற ஐயம், அம்பேத்கரை அவ்விழாவினின்றும் தடுத்து நிறுத்தியது.

பரோடா செல்ல பணமில்லாது தவித்தார் அம்பேத்கர். சமய சஞ்சிவி போல், மெஸர்ஸ் தாமஸ் கூக் கம்பெனியார், அவருடைய இன்ஷ்யூர் செய்யப்பட்டு மூழ்கிய பெட்டி படுக்கைகளுக்கான நஷ்ட ஈட்டை, கொடுக்கவே அப்பணம் கொண்டு பரோடா சென்ருர். செப்டம்பர் மாதம் பரோடா வரும் டாக்டரை வரவேற்க புகைவண்டி நிலையம் செல்லும்படி சில அதிகாரிகளைக் கேட்டிருந்தார் பரோடா மகாராஜா. ஆனுல் ஒரு மஹாரை வரவேற்க எவரும் விரும்பாது, நிலையம் வரவேயில்லை. ஓட்டல்களும், தங்கும் விடுதிகளும், ஹாஸ்டல்களும் அவருக்கு இடமளிக்க மறுத்தன. ஒரு பார்ஸி விடுதி மட்டும் அவருக்குத் தங்க வசதி செய்து கொடுத்தது. அதுவும் அவர் மஹார் என்று தெரியாததால்!

மகாராஜா அவருக்குக் கொடுத்த முதல் பதவி, படைக் காரியதரிசி (Military Secretary). பதவி

கூட அம்பேத்கரின் இன்னல்களை நீக்கவில்லை. அவருக்குக் கீழ் வேலை பார்த்த அதிகாரிகளும், வேலைக்காரர்களும், ஒரு மஹர் தொட்ட பைல்களைத் தொடவும் அஞ்சினர். கோடை காலத்தில் அவருக்கு ஒரு கோப்பை குளிர்பானம் தரக்கூட மறுத்தனர்! விழுப்பேற் பட்டுவிடும் என்ற காரணத்தால்! அமெரிக்க வாழ்க்கையையும், இந்திய வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பார்த்து மனம் ஏங்கினார் டாக்டர் அம்பேத்கர்.

வெறிக் கூச்சலுடன் அவர் அறையினுள் நுழைந்த பார்ஸிக் கூட்டம், அவர் ஏக்கத்தை மேலும் அதிகமாக்கியது. தங்கள் விடுதியில் தங்கும் அதிகாரி மஹர் என்று அறிந்துவிட்டதே, அவர்களுடைய கூச்சலுக்குக் காரணம். மாசு படிந்துவிட்ட விடுதியை விட்டு எட்டு மணி நேரத்திற்குள் காலி செய்து விடவேண்டுமென்ற உத்திரவும், மாசு ஏற்பட்டதால் தங்களுக்கு உண்டாகும் பொருட் செலவை அவரே மேற்கொள்ள வேண்டும் என்ற நிபந்தனையும், அம்பேத்கரை பெரிதும் வருத்தின.

மகாராஜாவுக்கு அவர் ஒரு அவசரக் கடிதம் எழுதினார். கடிதம் கண்ட மன்னர், திவானுக்கு அதை அனுப்பிவைத்தார். ஆனால் திவான் உதட்டைப் பிதுக்கித் தம்மால் செய்யக்கூடியது ஏதுமில்லை என்று கையை விரித்துவிட்டார்! ஊரெங்கும் சல்லடை போட்டு தங்க இடம் வேண்டிய டாக்டருக்கு ஏமாற்றமே காத்திருந்தது. இல்லை என்ற சொல் அவருக்களித்த தொல்லையை என்னென்பது? அரசாங்க

அதிகாரி, டாக்டர் அம்பேத்கர், ஒரு மரத்தினடியில் அமர்ந்து சிறு குழந்தைபோல் கேவிக் கேவி அழுதாராம்!

பம்பாய் திரும்பிவிடத் தீர்மானித்தார் அவர். நடந்தவைகளை திரு. கேலுஸ்கர் மகாராஜாவின் பார்வைக்குக் கொண்டுவந்தார். மகாராஜா வருத்தம் தெரிவிப்பதைத் தவிர, வேறெதுவும் செய்ய முடியாத நிலையிலிருந்தார். சமூகம் வகையறுத்து விட்டிருந்த ஜாதி மதக் கோட்பாடுகளை, மன்னன்கூட மதித்து வாழ வேண்டியிருந்தது. திரு கேலுஸ்கர் அம்பேத்கர் சார்பில் மீண்டுமோர் முயற்சி செய்தார். முற்போக்குக் கருத்துக்கள் கொண்ட ஒரு பேராசிரியர் வீட்டில் தங்க அம்பேத்கருக்கு வசதியளிக்க வேண்டினர். பேராசிரியர் சம்மதித்தாலும் அவர் மனைவி கண்டிப்பாக மறுத்து விட்டார். எடுத்த முயற்சி களனைத்தும் வீண் போயின. எனவே அம்பேத்கர் பம்பாய் திரும்பினர்.

இச்சமயத்தில் அம்பேத்கரின் சித்தி காலமானர். மகன் செய்யவேண்டிய கருமங்களைத் தவருது செய்து முடித்தார் அவர்.

வாழ்க்கை நடத்த மிகவும் கஷ்டப்படலானர் டாக்டர். சில பார்ஸி குழந்தைகளுக்குப் பாடம் சொல்ல ஆரம்பித்தார். பின்னர், ஸ்டாக் மற்றும் ஷேர் (Stocks and Shares) வியாபாரங்களில் ஈடுபடும் வர்த்தகர்களுக்கு ஆலோசனை கூறும் ஒரு கம்பெனியை ஆரம்பித்தார். தொழில் முன்னேற்றம் காணும் தருணத்தில், கம்பெனி முதலாளி ஒரு மஹர் என்று தெரிந்துவிட்டதால், அவருடைய வாடிக்கை காரர்கள்

வருவதை நிறுத்திக் கொண்டனர். வியாபாரம் படுத்து விட்டது. இச்சமயத்தில் ஒரு பார்ஸி பணக்காரருக்குக் காரியதரிசியாக நியமனம் பெற்றார் அம்பேத்கர். வாழ்க்கைப் போர் இன்னமும் தீராத நிலையில், அம்பேத்கரின் வாழ்வில் ஓர் ஒளி கண்டது. ஸிடன்ஹான் கல்லூரி (Sydenhan College)யில் அரசியல் பொருளாதாரத் துறை பேராசிரியராக நியமனம் பெற்றார், அம்பேத்கர். இச்சம்பவம் 1918-ம் வருஷம் நவம்பர் மாதம் நடந்தது. இங்கு கூட ஜாதி வேறுபாடுகள் தலை காட்டின. சில குஜராத்தி பேராசிரியர்கள், அறையினின்று தண்ணீர் குடிக்க அம்பேத்கருக்கு அனுமதி தர மறுத்தனர்.

தம் குலத்தவர் படும் கஷ்டங்களைப் பொறுக்க முடியாத டாக்டர், "இந்திய ஜாதிகள்" (Castes in India) மற்றும், "இந்தியாவின் சிறு தொல்லைகளும் அவற்றுக்கான நிவரணங்களும்" (Small holdings in India and their remedies) எனும் புத்தகங்களைப் பிரசுரித்தார். தாழ்த்தப் பட்டோருக்காக நடத்தப் பட்ட கிளர்ச்சிகளையும், குழுக்களையும் கவனிக்க அவர் தவறவில்லை. எனினும் இந்த நடவடிக்கைகளில் அவருக்கு அதிகமாக நம்பிக்கை இருக்கவில்லை. உயர் ஜாதித் தலைவர்களால் நடத்தப்பட்ட இக்கிளர்ச்சிகள் அரசியலில் சம்பந்தப் பட்டிருப்பதை அவர் கவனிக்கத் தவறவில்லை. ஆங்கிலேயரை விரட்டவே நடத்தப் பட்ட இக்கிளர்ச்சிகள் தாழ்த்தப் பட்டோருக்காக வடிக்கும் முதலைக் கண்ணீர் அவரை ஏமாற்ற முடியவில்லை. தம் குலத்தவர் குறையை பறைசாற்ற வென்று

"மூக் நாயக்" (Mook Nayak) எனும் பத்திரிகையைத் தொடங்கி நடத்தினர். 1920-ம் வருஷம் வெளியான இப் பத்திரிகையின் விளம்பரத்தைக்கூட வெளியிட மறுத்துவிட்டது, திலகரின் " கேஸரி " சஞ்சிகை!

சிக்கனமான வாழ்க்கையும், மனமறிந்து நடக்கும் மனைவியும், அம்பேத்கர் பணத்தை மிச்சம் பிடிக்க உதவினர். கோலாபூர் மகாராஜா அம்பேத்கருக்கு உதவ முன்வந்தார். அவர் கொடுத்த உதவியும், தாம் சேர்த்த பணமும் கொண்டு, டாக்டர் அம்பேத்கர், விட்டுப் போன தமது லண்டன் படிப்பைத் தொடர கப்பலேறினர்.

மிகமிகச் சிக்கனமாக வாழ்ந்து, மாதம் எட்டே எட்டு பவுண்டுகள் செலவில் காலங்கடத்தினர் அவர். பிரிட்டிஷ் மியூஸியமும், இந்திய காரியாலய லைப்ரரியும் அவருக்கு உதவின. " ப்ரோவின்ஷியல் டிசென்ட்ரலைசேஷன் ஆப் இம்பீரியல் பைனன்ஸ் இன் இண்டியா " (Provincial Decentralisation of Imperial Finance in India) எனும் அவரது ஆராய்ச்சிக் கட்டுரைக்காக, எம். எஸ். ஸி. பட்டம் பெற்றார். 1922-ம் வருஷம் அவரை ஆங்கில சட்ட மன்றம் (Bar) பாரிஸ்டர் பட்டமளித்து கௌரவித்தது.

பணமுடைகாரணமாக மேலும் லண்டன் பட்டணத்திலிருக்க முடியாமல் நாடு திரும்பினர் அம்பேத்கர். அப்போது அவர் எழுதிவந்த " ரூபாயின் பிரச்சினை " (The Problem of the Rupee) எனும் ஆராய்ச்சிக் கட்டுரையை இந்தியாவில் முடிக்க வேண்டியதாயிற்று. லண்டன் சர்வ கலாசாலை இக்கட்டுரையை தொ

வித்து, அம்பேத்கருக்கு டாக்டர் பட்டம் வழங்கிற்று. டி. எஸ். ஸி. பட்டம் பெற்ற டாக்டர் அம்பேத்கருக்கு 1922-ம் வருஷம் வரை சில திங்கள் பான் பல்கலைக் கழகத்தில் (Bonn University) பிரவேச அனுமதி கிடைத்தது.

அல்லும் பகலும் படித்துவந்த அம்பேத்கர் தாய் நாட்டில் தம் குலத்தவர் நடத்தும் கிளர்ச்சிகளை மறக்காமல் கவனித்து வந்தார். லண்டனில் அவர் படிக்கும் சமயம் மற்றுமோர் தொல்லை ஏற்பட்டது. பொறுமை கொண்ட பரோடா அதிகாரிகள் சிலர், அம்பேத்கர் பெற்ற உபகாரச் சம்பளத்தைத் திருப்பித் தரவேண்டுமென்று நிர்பந்தித்துக் கடித மெழுதினர்கள். மகாராஜாவுக்கு தெரியப் படுத்தாமலே இவர்கள் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் வழக்கு மன்றம் வரை செல்லும் போல் தென்பட்டது. இத் தருணத்தில் அதிகாரிகளின் செயல்களனைத்தும் மகாராஜாவிற்கு தெரியவந்தன. உடனடியாக, மகாராஜா அம்பேத்கரின் இன்னல்களுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டார். எல்லா நடவடிக்கைகளும் வாபஸ் பெறப்பட்டன.

---

## 3

இந் நிலையில் டாக்டர் அம்பேத்கரிடம் போதிய பணமில்லாததால், அவரால் 'சனத்' பெற முடியாது போயிற்று. அவருடைய நண்பர் ஒருவர் பணவுதவி செய்து, அம்பேத்கரின் சட்ட வாழ்க்கையை ஆரம்பித்து

வைத்தார். சட்ட நிபுணராக அம்பேத்கரின் வாழ்க்கைப் பாதையில் தடைகற்கள் பல தோன்றின. எதையும் பொருட் படுத்தாமல் அவர், பரேல் வீட்டிலேயே தொடர்ந்து வாழ்ந்தார். காலஞ்சென்ற அவர் சகோதரனின் மனைவி மக்களுக்காக்கும் பொறுப்பு வேறு அவர் மீதிருந்தது. அம்பேத்கரின் மனைவி, வெகு சிக்கனமாக குடும்பம் நடத்தினர்.

அவரது குடும்பம் சோகக் கடலில் மூழ்கியிருந்த நிலை. மூத்த மகன் ரமேஷ் சிறுவயதிலேயே இறந்து விட்டான். அச்சமயம் அம்பேத்கர் அமெரிக்காவிலிருந் தார். கங்காதர் என்ற அவரது இரண்டாவது மகனும் கூட சிறிய பிராயத்திலேயே மறைந்து விட்டான். எஸ்வந் எனும் மூன்ருவது குமாரன் நோய்வாய் பட்டுக் கிடக்கையில், அம்பேத்கரின் ஒரே பெண் இந்து, சிசு வாகவே செத்துவிட்டது. கடைகுட்டி ராஜரத்தினத் தின் மீது உயிரையே வைத்து வளர்த்து வந்தார் டாக்டர். கணவனும் மனைவியும் வாழ்க்கைப் புயலை தைரியத்துடன் எதிர்த்து நின்றனர்.

பரேல் பிரதேசத்தில், ஏழை மக்களின் வக்கீலாக இருந்தார் அம்பேத்கர். ஆணித்தரமான சட்ட ஆலோசனை மட்டுமன்றி அன்பும் நீதியும் கொண்ட தொடர்பு கூட பெற்றனர் ஏழைகள். வக்கீல் துறையில் எத்துணை அலுவல் இருந்தாலும், தமது வாழ்க்கை லட்சியமான தாழ்த்தப்பட்டோர் நன்னிலைக்காக பாடுபட மறக்க வில்லை, அவர்.

மேனுட்டு செல்வாக்கு காரணமாக நம் நாட்டில், பத்தொன்பதாம் நூற்ருண்டின் இடைப்பகுதியில், பல

மாறுதல்கள் ஏற்பட்டன. மைசூரிலும் டெல்லியிலு மாக ஆட்சி புரிந்த முகமதியர்களின் பலத்தால் வாழ் வதற்கே மிகவும் அவதிப்பட்டுக் கொண்டிருந்த இந்தியர் களுக்கு வரமாக வந்தது ஆங்கிலேயர் ஆட்சி. தங்கள் பலத்தை வெகுவாக பாதித்த ஆங்கிலேயர் ஆட்சியை வெறுத்தனர், முகமதியர். பொதுவாக முகமதியர் களுக்கு கல்வி யறிவு இருக்கவில்லை. எனவே மேம் பாடுடைய அரசிய லறிவுபெருது நின்றனர். மேனுட்டு செல்வாக்கை நெருங்க வொண்ணுது தடுத்த முகமதிய சமூகம், மேனுட்டு சீர்த்திருத்தங்களைப் பெருமல் தனித் தியங்கியது. பொருளாதாரத் துறையில் இவர்கள் நிலை மிகவும் மோசமாக இருந்தது. ஆஸ்த்தான ஆதரவு கூட, முகமதிய ஆட்சி மறைந்ததுமே, விலகிவிட்டது. புத்தம் புது வழக்கு முறைகளை எடுத்தாண்ட இந்து சமுதாயத்தில் ஒன்றி இயங்க முடியாமல் தவித்தது முகமதியர் கூட்டம்.

சமூக கூட்டுறவு முறையில் தற்காப்பு நிலையைப் பற்றி ஏதும் சிந்திக்காமல், இந்து சமுதாயமே மறைந்து விடுமோ என்ற பயங்கர நேரத்திலும் கூட, முயற்சிகள் எடுத்துக்கொளளாமல் இருந்தது. ஆங்கிலேயர் ஆட்சி முறை ஏற்பட்டபோது இந்து சமூகத்தில் ஏற்பட் டிருந்த பிளவுபாடுகள் அதிகமாக விருந்தன. எனவே தேவைகள் ஏற்பட்டபோதும் தங்கள் தங்கள் பலத் தைக் காட்ட முடியாது தவித்தன.

பிறப்புபடி ஏற்பட்ட ஜாதி மத வேறுபாடுகளும் அவற்ருல் ஏற்பட்ட கொடுமைகளும் இருந்தனவே தவிர, சீர்த்திருத்தவாதிகள் கூறுவதுபோல் வேறெது

வும் நடக்கவில்லை. தாழ்த்தப்பட்டோரின் தோள் மீதேறி தங்கள் பெருமையைப் பேண முயன்றனர் உயர் வகுப்பினர். வகுப்பு வேறுபாடுகளும், கட்டுப் பாடுகளும், அவற்றை மீறுவோர் பெறும் தண்டனை களும், மனிதச் சரிதத்திலேயே காணப்படா கொடுமை களாகும். இதைத் தவிர தாழ்த்தப் பட்டோரிடை யிலேயே வேறுபாடுகள் தோன்றி பிளவுகள் கண்டன. பெரியதும் சிறியதுமாக உதித்த இத்தகைய வேறு பாடுகள் நாட்டு நல்வாழ்க்கைக்கே உலை வைத்தன. ஆயினும், திண்மை வாய்ந்ததோர் ஆட்சி முறையின் உதவி கொண்டு பிளவுகண்ட சமூகத்தைக் கட்டிப் பிணைக்க முடியும். இதைத் தான் ஆங்கில அரசு செவ்வனே செய்து முடித்தது.

இந்துக்கள் ஒரு விதத்தில் அதிருஷ்ட மிக்கவரா யிருந்தனர். அவர்களின் உயர்குல தலைவர்கள் நாட்டில் தோன்றும் மாறுபாடுகளை உணர்ந்து, அதற்கேற்றவாறு நடந்துகொண்டனர். மேனாட்டு கல்வி பயின்று, அவர் தம் வாழ்க்கை முறையுடன் அன்புத் தொடர்பு கொள்ள விழைந்தனர். ஆங்கில மொழி, ஆங்கில சட்டம், சரித்திரம், இலக்கியம், விஞ்ஞானம் பயின்றனர். பொருளாதார லாபத்திலும், வாழ்க்கை இன்பத்திலும், மேனாடு வழங்கியதை ஏற்க அவர்கள் மறுக்கவில்லை. புத்திசாலித்தனமாக இல்லாவிடினும், நாளுக்கேற்ற முறையில் மேனாட்டு உடை யலங்காரங்களைப் பின் பற்றினர். ஆயினும் மதச் சம்பந்தப் பட்டவரை மேனாட்டு பழக்கங்களை ஏற்க மறுத்தனர். இந்து மதத் தையும், சமூகக் கழகங்களையும் சீர்த்திருத்த முயன்ற

வர்கள் தோல்வியே கண்டனர். ஜாதிப் பெருமை நீக்க முடியாது பலம் பொருந்தியிருந்தது.

ஆங்கில ஆட்சியில் தாழ்த்தப்பட்டோர் குறைகள் வெகுச்சிறிய அளவில் தான் நீக்கப்பட்டன. படிக்கச் சந்தர்ப்பங்களும், தொழில் செய்ய சந்தர்ப்பங்களும் கொடுக்கப்பட்டன. இதன் மூலம் பொருளாதாரத் திலும் முன்னேற்ற மடைய ஏதுவாயிற்று. ஆகவே, இந்தியச் சுதந்திரக் கிளர்ச்சிகளின் போது, தாழ்த்தப் பட்டோர் ஆங்கிலேயருடன் ஒத்துழைத்ததில் வியப் பில்லை. முதன் முதலாக அன்பும் கருணையும் கலந்த பாதுகாப்பு பெற்ற இம் மக்கள், அதனை ஈன்ற பரங் கியன் மீது மதிப்பு வைத்ததில் ஆச்சரியம் என்ன விருக்கிறது ?

ஒரு சில இந்து சீர்த்திருத்தவாதிகள் தாழ்த்தப் பட்டோர் நன்னிலைக்காக பாடுபட்டனர். இதில் சிலர் உண்மையாக உழைத்தனர். பலர், சீர்த்திருத்தம் செய் வதை ஒரு 'பாஷன்' எனக்கருதினர். எனினும், இந்திய அரசியல் உக்கிரமடைந்த போது, சமூகச் சீர்த்திருத்த ஆவல் அடங்கிக்கொண்டு வந்தது. இந்து முஸ்லிம் வேறுபாடுகள் போது, இந்துக்கள் அனைவரும் ஒன்று கூடுவதே அறிவுடைமையாகும். ஆனல், வகுப்பு வாதங்கள் நாட்டுப் பிரச்சினைகளாக மதிக்க மறுத்தனர் உயர்குலத்தவர். வெளி நாட்டானை விரட்டிவிட்டுப் பின்னர் இப்பிரச்சினைகளைக் கவனிக்கத் தீர்மானித்தனர்.

தாழ்த்தப் பட்டவரிடையினின்றும் பல தலைவர்கள் வெளிப்பட்டனர். உயர் குலத்தவரிடையேயும் பல தலைவர்கள் கிளம்பி, அவர்கள் குறை தீர்க்கப்பணி

யாற்றுவராயினர். இவர்கள் சேவை, இந்திய சமூக சரித்திரத்தின் முக்கிய பாகத்தில், பெருத்த உதவி செய்தது.

இத்தகைய சூழ்நிலையில் தான், தாழ்த்தப்பட்டவரின் உயிர்க் குரலாகத்தோன்றி போராடினுர் டாக்டர் அம்பேத்கர்.

---

## 4

இந்தியா சுய ஆட்சி பெற நினைக்கும் கனவு நனவாக, சின்னஞ்சிறு, துறைகளில் சுய ஆட்சி முறை வழங்குதலின் அவசியம் அறிந்து, இங்கிலாந்து மக்கள் மன்றத்தில் (House of Commons), 1917-ம் வருஷம் ஆகஸ்ட் இருபதாம் தேதி, இந்திய நாட்டுக் காரியதரிசி மாண்டேக், ஒரு பிரகடனம் செய்தார். தொடர்ந்து, இந்திய அரசியல் தலைவர்கள், குழுக்கள், கட்சிகளின் வெவ்வேறு யோசனைகளைத் திரட்டும் பொருட்டு, அவர் இந்தியா வந்தார். பலப்பலவான கட்சிகள் தங்கள் தங்கள் பிரதி நிதிகளை அனுப்பிவைத்தனர். தாழ்த்தப்பட்டோர் கூட பலரை அனுப்பினுர்கள் பஞ்சம காவலி அபிவர்த்தி—அபிமான சங்கம், ஆதி திராவிட ஜன சங்கம், மற்றும் என். ஜி. சந்திரவர்க்கரின் தாழ்த்தப்பட்டோர் மிஷன் போன்றவை மாண்டேக் துரையைச் சந்தித்தன.

1917-ல் இந்திய தேசீய காங்கிரஸ், தாழ்த்தப்பட்டோரின் பிரச்சினையை ஆராயத் துவங்கிற்று. கடந்து

போன ஆண்டுகளைத் திரும்பிப் பார்க்கையில், இப்பிரச்சினையை எவ்வளவு சிறியதொன்ருக எடுத்துக் கொண்டனர் என்று புலப்படும். அரசியல் விடுதலைப் போராட்டம் வெற்றி பெறவேண்டுமெனின் நாட்டு மக்களிடையே ஜாதி, மத வேற்றுமைகள் பெரிதாக இருப்பது நல்லதல்ல. இதை அன்றைய காங்கிரஸ் உணரவில்லை.

மாண்டேக் இங்கிருக்கையில் தாழ்த்தப்பட்டோரின் இரண்டு மாநாடுகள் நடைபெற்றன. ஒரு மாநாட்டிற்கு சந்திரவர்க்கர் தலைமை தாங்கினர். இந்த மாநாடு இரண்டு தீர்மானங்களை நிறைவேற்றியது. ஒன்று தங்கள் ஜனத்தொகைக் கேற்றவாறு சட்ட சபைக்கு சொந்தப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க உரிமை கொடுத்து, அரசாங்கம் தங்கள் நலனைப்பாதுகாக்க வேண்டும். இரண்டு, காங்கிரஸ்—முஸ்லிம் லீக் கூட்டுறவை ஆதரித்து, பிரதியாக காங்கிரஸ் தனது வரப் போகும் மாநாட்டில் சமூக, ஜாதி மத ஒற்றுமைகளை எடுத்துக் கூறி உயர் குலத்தவரை நல்வழித்திருப்ப வேண்டுமென்று, கேட்டுக் கொண்டது.

மற்றெரு மாநாட்டில், உயர் குலத்தவருக்கு மாற்றப் பட்ட ஆட்சி உரிமையை எதிர்த்து, சட்ட சபையில் தங்களுக்கும் இடமளிக்க வேண்டுமென ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினர்.

விரைவிலேயே (1918-ம் வருஷம் மார்ச்) தாழ்த்தப் பட்டோர் மிஷன், பம்பாயில் தனது முதல் அகில இந்திய மாநாட்டைத் துவக்கிற்று. அனல் பறக்கும் மேடைச் சொற்பொழிவுகளும், கனல் தெறிக்கும் தீர்மான நிறை

வேற்றங்களும் நடைபெற்றன. பாலகங்காதர திலகர் சிம்ம கர்ஜனை செய்தார். தொடர்ந்து, அகில இந்தியத் தீண்டாமை-எதிர்ப்பு பிரச்சாரத்தாள் ஒன்று வெளி யிட்டனர். பிரபல தலைவர்கள் தங்கள் சொந்த வாழ்க் கையில் தீண்டாமையை கடைபிடிப்பதில்லை என்று வாக்குறுதி பூண்டு கையெழுத்திட்டனர். ஆனால் தனது தோழர்களின் வற்புறுத்தல் காரணமாக, திலகர் கை யெழுத்திட மறுத்துவிட்டார்.

பிரம்மாண்டமான அரசியல் கிளர்ச்சிகளில் பங்கு பெறாது போயினும், அம்பேத்கர் சின்னஞ்சிறு விஷயங் களில் ஈடுபட்டார். ரோஹிதாஸ் வித்யா வர்தினி சமாஜத்தை ஆதரித்து, ஹரிஜன கிரிக்கெட் ஆட்டக் காரர் பி. பாலுவை தேர்தலில் ஆதரித்து, அவரை பம்பாய் நகரசபை மன்றத்திற்கு அனுப்பிவைத்தார்.

மகாராஷ்டிரத்தில் மற்றுமோர் மன்னர், தாழ்த்தப் பட்டவருக்கு பெரு உதவி செய்யலானர். கோலாபூர் மகாராஜா ஸ்ரீ சாஹு மகராஜ், எனும் இவர், தாழ்த்தப் பட்டவர்களுக்கு கல்வியும், பதவியும் அளித்து, அவர் களுடன்கூட உணவுகூட அருந்துவார்.

1919-ல் பிரபல சமூகச் சீர்த்திருத்த வாதியான கர்ம வீர் சிந்தேயும், டாக்டர் அம்பேத்கரும், சர்த் பரோ கமிட்டி (Sarth Borough Committee) யின் முன் சாட்சி கூறவந்தனர். அரசியல் சுதந்திரத்திற்கு முன்னர் சமூகச் சீர்த்திருத்தம் செய்தல் அவசியம் என்று எடுத் துரைத்தார் அம்பேத்கர். அவருடைய ஆணித்தரமான ஆலோசனைகள் காரணமாக, 1919 ஆண்டு இந்திய அரசாங்க சட்டத்தில் தாழ்த்தப் பட்டோருக்கு அரசியல்

முக்கியத்வம் வழங்கப்பட்டது. அதன்படி, மத்திய சபையில் பதினன்கு அரசாங்கத்தினரால் அமர்த்தப் பட்ட அங்கத்தினர்களுள் ஒருவர் தாழ்த்தப் பட்டவராக இருந்தார். வெவ்வேறு பிரதேச சபைகளில் கீழ்கண்ட வாறு இடமளிக்கப்பட்டது. மத்தியப் பிரதேசம்: 4 பம்பாய்: 2; பீஹார்: 2; வங்காளம்: 1; யுனைடட் பராவின்ஸ்: 1; சென்னை: 10.

திரு. தத்தோபா பாவர் மூலம் அம்பேத்கருக்கும் கோலாபூர் மகாராஜவுக்கும் தொடர் பேற்பட்டது. அவர் உதவியுடன் 'மூக்நாயக்' (Mook Nayak), (ஊமைத் தலைவன்) எனும் பத்திரிகையை மாதமிரு முறை பிரசுரித்தார். 1920-ம் வருஷம், ஜனவரி 31-ம் தேதி வெளிவந்த முதல் இதழில் அம்பேத்கர் எழுது வார்:

"சமத்துவம் இல்லாத வீடு, இந்தியா. இந்திய சமூகம் ஒரு மாபெரும் கோபுரம். பல மாடங்கள் கொண்டதாக இருப்பினும், அவற்றைப் பிணைக்கும் ஏணியோ, படிகளோ இல்லை ஒரு மாடத்தில் பிறந்துவிட்ட மனிதன் அதிலேயே இறக்கவேண்டும். உயிருடைய, உயிரற்ற யாவற்றிலும் ஆண்டவன் இருக்கிறுன் எனப் பறை சாற்றும் ஒரு மதத்தினர், தாழ்த்தப்பட்டவரை மிருகங்களினும் கேவலமாகக் கருதுவது வருந்தத்தக்கது. கல்வியறிவும், அரசியல் பலமுமின்மையே இதற்கு காரணம். தாழ்த்தப் பட்டோரை விழிப்படைய செய்து, சுய நிலையறியச் செய்யவேண்டும். அப்போது தான் அவர்களுக்கு நல்வழி பிறக்கும்."

"பரங்கியர் சர்வாதிகார ஆட்சியை எதிர்க்க இந்துக்

களுக்கு எத்தனை உரிமை இருக்கிறதோ, அத்துணை உரிமை தாழ்த்தப் பட்டோருக்கு, இந்திய உயர் குலத் தவரை எதிர்க்கவும் இருக்கிறது.'' என்று சவுக்கடி கொடுத்தார், அம்பேத்கர்.

மங்காவுன் (Mangaon) ஊரில் நடந்த மாநாட்டில் கோலாபூர் மகாராஜா ஒரு பெரிய உண்மையை எடுத் துரைத்தார்.

"டாக்டர் அம்பேத்கரில் நீங்கள் உங்கள் கடவுளைக் கண்டுவிட்டீர்கள். உங்களது அடிமைத் தளைகளை அறுத்தெறியவல்ல தலைவர் அவர்தான். ஒரு காலத்தில் அவர் அகில இந்திய தலைவராவார் என்பதில் சந்தேக மில்லை.''

1923 ஆகஸ்ட் மாதம், பம்பாய் சட்ட சபையில் திரு. எஸ். கே. போல் ஒரு தீர்மானத்தைப் பிரரேபித்து அதை நிறைவேற்றியும் வைத்தார். இதன்படி, பொது ஜன பணத்தில் கட்டிய நீர்க்குளங்கள், அரசாங்கம் வெட்டிய கிணறுகள், போன்றவை, தாழ்த்தப்பட் டோர் வசதிக்காகவும் விடப்பட்டன. மற்றும் பொது ஜனப் பள்ளிகள், நீதிமன்றங்கள், காரியாலயங்கள், மருத்துவச் சாலைகள், அனைத்தும் அவர்களுக்கு திறக்கப் பட்டன. மகிழ்ச்சி தாங்கமாட்டாது, இவ்வகுப்பினர், போல் அவர்களுக்கு மரியாதை செய்து தங்கமெடல் ஒன்றை பரிசளித்தனர்.

1927-ல், கவர்னரால் அமர்த்தப்பட்ட அங்கத் தினராக சட்ட சபையினுள் நுழைந்தார் அம்பேத்கர். இந்த ஆண்டில் தான், முதன் முதலாக இவ் வகுப்பினர் நேரடி நடவடிக்கைகளில் இறங்கினர்.

19, 20ம் தேதிகளில், கோலாபா ஜில்லாவில் தாழ்த் தப்பட்டோர் மாநாடு நடந்தது. சுமார் 7000 மக்கள் இதில் பங்கு பெற்றனர். அம்பேத்கர் தலைமையில் பல தீர்மானங்கள் நிறைவேறின. போல் சட்டத்தை கடை பிடிக்க ஸ்தல குழுக்களைக் கட்டாயப் படுத்தவேண்டு மென்றும் மீறுபவர்களுக்குத் தண்டனை அளிக்க வேண்டு மென்றும் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண் டது. 1924-ல் மஹாத் நகராண்மைக் கழகம், நகர தண்ணீர் தேக்கத்தை இவர்களுக்காக திறந்து வைத் திருந்தது. ஆயினும் சில உயர்குல இந்துக்கள் அவர்களை நெருங்கவிடாது தடுத்தனர். எனவே, மாநாடு, கூடி யிருந்த அனைவரும் அங்கு சென்று நீர் குடிக்கவேண்டு மென்று தீர்மானித்தது. மாபெரும் கூட்டம் தேக் கத்தை நோக்கி நடந்தது. அம்பேத்கர் முதலில் நீரை அள்ளிப் பருகினார். ஏனையோர் அவரைப்பின் பற் றினர்.

இதற்குள் ஒரு சில விஷமிகள், அம்பேத்கர் வீரே ஷ்வர் ஆலயத்தினுள் பிரவேசிக்க விருப்பதாக கூற லாயினர். பழமை பேணும் இந்துக்கள் தடிகளுடன் தயாராக இருந்தனர். சில ரௌடிகள் மாநாட்டினுள் நுழைந்து கலகம் நடத்தினர். சுமார் இருபது பேர் காயமடைந்தும், அம்பேத்கர், மாநாட்டினரை பொறுத் துக்கொள்ள வேண்டினார். போலீஸார் தலையிட்டு, சில இந்துக்களை சிறைபடுத்தி, வழக்குத் தொடர்ந்து, தண் டனையும் வாங்கித்தந்தனர்.

பழமை அசைந்து கொடுக்கலாயிற்று. ஆங்கிலேயர் அரசாட்சிக்குப் பதில் பீஷ்வாக்கள் அரசு இருந்திருப்

பின், என்னுகியிருக்குமோ? பீஷ்வாக்கள் காலத்தில் தாழ்த்தப்பட்டோர் குறிப்பிட்ட கால அளவினுள் அல்லாது வேறு சமயம் பூனு நாட்டுக்குள் பிரவேசிக்கப் படமாட்டார். இதே மாநாடு அப்போது நடந்திருப் பின், பீஷ்வாவின் யானைகள் உள் புகுந்து, அங்கத் தினரை துவம்சம் செய்திருக்கும்.

தூங்கினவர் எழுந்துவிட்டதை அறிவுறுத்தியது இம் மாநாடு. போர் துவங்கிவிட்டது. தாழ்த்தப் பட்டோர் துணிவுடனும், தைரியத்துடனும் முன்னேற துவங்கிவிட்டனர். மஹாத் சம்பவம் செய்தித்தாள் களில் வெளி வந்ததும், நாடெங்கும் கண்டன கூட்டங் கள் நடந்தன. பழமையை எதிர்த்துப் பிரச்சாரங்கள் செய்யப்பட்டன.

அம்பேத்கர் அச்சிலும், மேடையிலும் இடை விடாது தம் கருத்துக்களை முழங்கினுர். 1927-ம் வருஷம் ஏப்ரல் மூன்ரும் தேதி, "பஹிஷ்கிருத் பாரத்" (Bahiskrit Bharat) எனும் மராட்டிய பத்திரிகை துடங்கினுர். பம்பாயில் அச்சிட்டு வெளிவந்த இதில் அவர் வெகுவாக உழைத்தார். சீர்த்திருத்தங்கள் அனை வற்றையும் விளக்கினுர். தாழ்த்தப்பட்டோரின் ஒன்று பட்ட கருத்துக்கள் இதில் இடம் பெற்றன.

1928, மார்ச் மாதம், இந்தோர் மகாராஜா விற்கும், அமெரிக்க பெண்மணி மில்லருக்கும் நடைபெற விருந்த திருமணத்தை அம்பேத்கர் ஆதரித்தார். மற்றும் சட்ட சபையில் தம் வகுப்பினருக்கு பொருளாதாரத் துறையில் சமத்துவம் வேண்டுமென பிரசாரம் செய் தார்.

இதற்குள்ளாக, ஆங்கில அரசு, 1919 வருஷ சட்டத்தை மறுபரிசீலனை செய்ய முடிவுசெய்து சைமன் கமிஷனை அனுப்பிவைத்தது. இந்திய பிரதிநிதி இல்லாத இக்கமிஷனை தேசிய காங்கிரஸ் பகிஷ்காரம் செய்தது. சென்ற இடமெல்லாம் தோல்வி, தடியடி, குண்டு மாரியைத் தவிர வேறெதையும் காணவில்லை சைமன் கமிஷன். தேசிய காங்கிரஸ் ஏற்படுத்திய மோதிலால் நேரு கமிட்டி, தாழ்த்தப் பட்டோர் சங்கங்களை அரசியல் கழகங்கள்ாக கருத மறுத்து, அவற்றிற்கு கமிட்டியில் இடமளிக்கவில்லை. மற்றும், அம்பேத்கரும் அவர் கட்சிகளும், ஏனைய சங்கங்களும் சைமன் கமிஷன் முன் தங்கள் குறைகளையும் கருத்துக்களையும் எடுத்துச் சொல்லினர். இதை வெறுத்த தேசிய காங்கிரஸ், அம்பேத்கரை ஆங்கிலேயன் கைபொம்மை என்று எள்ளி நகையாடியது.

1928-ல், 1,50,000, மில் தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தனர். இவர்களில் பெரும் பாலானவர் தாழ்த்தப் பட்டவராவர். அம்பேத்கர் இவ்வேலை நிறுத்தம் ஒரு அரசியல் தந்திரம் என்று கண்டு கொண்டார். தாழ்த்தப் பட்டவருக்காக உதவி செய்ய மறுத்த தேசீய காங்கிரஸ், தங்கள் லட்சியம் கைகூட அவர்களையே உபயோகித்துக் கொள்வதை வெறுத்து, வேலை நிறுத்தத்தை வாபஸ் பெறுமாறு தொழிலாளிகளைக் கேட்டுக் கொண்டார். இதன் மூலம் தொழில் சங்கம் கூட அவரை வெறுக்கலாயிற்று.

பம்பாய் சட்டசபை அமர்த்திய பம்பாய் கமிட்டி

(சைமன் கமிஷனுடன் ஒத்துழைத்தது இது) அறிக்கையை தயார் செய்தது. ஆனால் அம்பேத்கர் இதற்கு ஒப்பமிட மறுத்து, சொந்தமாக அறிக்கை விடுத்தார். இதில் கண்ட ஷரத்துக்கள் பின் வருமாறு :

1) பிரதேச நிர்வாகத்தில் முழுப் பொறுப்பு.

2) வாக்குரிமை, சட்ட சபையினரின் முழுத் தேர்தல் உரிமை, வகுப்பு வாரி தேர்தல் ஒழிப்பு, முகமதியர், தாழ்த்தப் பட்டோர், ஆங்கில - இந்தியருக்காக ஒதுக்கப் பட்ட இடங்கள், அரசாங்க அலுவலகங்களில் முழு இந்தியர்கள் உரிமை.

இந்த அறிக்கை கண்ட அம்பேத்கரின் எதிரிகள் மனம் திருந்தி, அவருடன் கைகோர்த்தனர்.

---

## 5

பம்பாய் சட்ட சபையின் இரண்டு அரசாங்கத்தால் அமர்த்தப்பட்ட அங்கத்தினர்கள், டாக்டர் அம்பேத்கரும் டாக்டர் சோலாங்கியும். பரந்த அறிவும், சிறந்த ஊக்கமும், உயர்ந்த சிந்தனையும் படைத்த டாக்டர் அம்பேத்கர், சட்ட சபையில் தாழ்த்தப்பட்டோருக்காக போராடினர். அவரது சீறிய பகுத்தறிவு, அரசியல் எதிரிகளின் மதிப்பைக் கூட பெற்றுவிட்டது. எப்பொருள் பற்றி பேசினலும், வாதாடினலும், அப்பொருளை அக்கு வேறு, ஆணி வேருகப் பிரித்து அலசி ஆராய்வதில் நிபுணராகத் தோன்றினர்.

இச்சமயத்தில், ஆலயப் பிரவேசம் பற்றிய கேள்வி, சீர்த்திருத்தவாதிகளின் கவனத்தைக் கவர்ந்தது. 1927ம் ஆண்டு ஜூன் மாதம், பம்பாய் தாகூர் வர்ட்டில் கட்டப் பட்ட புது ஆலயத்திற்கு எல்லா இந்துக்களும் வரலாம் என்று பத்திரிகைகள் அறிவித்தன. எனவே இது பற்றி பேச, டாக்டர் அம்பேத்கர் ஆலயக் காரியதரிசி யிடம் நேரம் குறிப்பிட்டுக் கொண்டார். அதன்படி அவரும் சிவதர்கர் என்பவரும் ஆலயம் சென்றனர். இது பற்றியறிந்த ஒரு சில பழம் பெருச்சாளிகள், ஆலயத்தின் முன் ஒரு கூட்டம் கூட்டி, அவ்விருவரை யும் கலாட்டா செய்ய வாரம்பித்தனர். ஆயினும் அம் பேத்கர் தைரியத்துடன் கூட்டத்தை சமாளித்தார். கோபங்கொண்ட கூட்டத்தினர் ஆலயக் காரியதரிசி யைப் பிடித்துக்கொள்ளவே, அவர் பயந்து, இரு தலை வர்களைச் சந்திக்க மறுத்துவிட்டார். எனவே அம்பேத் கரும் அவர் நண்பரும் ஆலயத்தைவிட்டு வெளிக்கிளம் பினர்.

தாழ்த்தப் பட்டவரிடையிலேயே காணப்பட்ட வேறுபாடுகளைக் களைந்து, அனைவரையும் ஒன்றுபடச் செய்வதில் நாட்டம் செலுத்தலானுர் அம்பேத்கர். ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு என்ற உண்மையினை நன்கறிந்த அம்பேத்கர், இச்செயலில் கவனம் செலுத்தி னுர்.

சௌதர் குளத்தின் நிகழ்ச்சி, தாழ்த்தப் பட்டோரின் அவல நிலையை வெகுவாக பொதுஜனங்கள் கவனத் திற்கு கொண்டுவந்தது. மஹாத் நகரசபை, மேலும் பல இன்னல்கள் ஏற்படுமென பயந்து, குளத்தின்

தண்ணீரை தாழ்த்தப் பட்டோர் உபயோகிப்பதினின் றும் தடுத்துவிட்டது. இதை எதிர்க்கத் துணிந்த அம்பேத்கர் பல தொண்டர்களைச் சேர்த்து, 1927, டிசம்பர் 25 மற்றும் 26-ம் தேதிகளில் சத்யாக்ரகம் செய்வதாக செய்திவிடுத்தார். 27-11-1927ம் "பஹிஷ் கிரிட் பாரத்" (Bahiskrit Bharat) எனும் தம்முடைய செய்தித்தாளின் ஆசிரிய பகுதியில், சத்யாக்ரகத்தின் அவசியத்தை வெளிப் படுத்தினர். தாழ்த்தப் பட்ட வரின் மேம்பாட்டில் கருத்து செலுத்த மறுப்பாரா யின், அவர்களனைவரும் (தாழ்த்தப் பட்டோர்) வேற்று மதங்களைத் தழுவ நேரிடலாம் என்று எச்சரிக்கை விடுத்தார்.

பழமை புரக்கும் பெரியவர்கள், சத்தியாக்கிரகத் தை எதிர்க்கத் தீர்மானித்தனர். தற்காலிகமாக, குளத் தின் நீரை அம்பேத்கரும் அவர் தோழர்களும் உப யோகிப்பதினின்றும் தடுக்குமாறு, மஹாத் வழக்கு மன்றம் ஒரு இன்ஜங்க்ஷன் உத்தரவு பிறப்பித்தது.

இதற்குள்ளாக மாநாடு கூட்டுதற்கான ஏற்பாடு கள் நடை பெறலாயின. மாஜிஸ்டிரேட்டும், போலீ ஸும், தயாராக விருந்தனர். பதினைந்தாயிரம் மக்கள் கூடியிருந்தனர். அம் மாநாட்டின் போது பல தரப் பட்ட தீர்மானங்களும் நிறை வேற்றப்பட்டன. ஆயி னும் மிகப்புரட்சி கரமானதொரு தீர்மானம் என்ன வெனில், சாதி சமயபேதங்களை அங்கீகரிக்கும் மனு நீதியை புரக்கணித்து, அப் புத்தகத்தை பகிரங்கமாக தீயிலிட்டதேயாம். மனுநீதியின் பல்வேறு பகுதிகளை அம்பேத்கர் வரவேற்றாலும், சாதி பேதங்களை வளர்க்கும்

'நீதி'யை அறவே வெறுத்தார். மற்றுமோர் தீர்மானம், இந்து சமுதாயம் ஒன்றுபட சாதி வேற்றுமைகளை ஒழித்து, ஆலய பூசாரித் தொழில் செய்ய விரும்பும் எவரும் அத் தொழில் மேற் கொள்ளலாம், என்று கேட்டுக்கொண்டது.

சௌதார் குளச் சத்தியாக்கிரகம் செய்யவேண்டிய தீர்மானம் முழுமனதுடன் நிறைவேறி, நாலாயிரம் தொண்டர்கள் சத்தியாக்கிரகம் செய்ய முன்வந்தனர். இதற்குள் ஜில்லா மாஜிஸ்டிரேட் குறிக்கிடவே, சிறிது நேர ஆலோசனைக்குப் பின்னர், அனைவரும் குளத்தைச் சுற்றி ஊர்வலம் போகவேண்டு மென்றும், வழக்கு மன்றம் வழக்கில் தீர்ப்பு கூறும்வரை சத்தியாக்கிரகத்தை ஒத்திவைக்க வேண்டுமென்றும் தீர்மானித்தனர். டாக்டர் அவர்கள், சமூகச் சீர்த்திருத்த வேலையில் பெண்களின் பங்கை கவனிக்காமலில்லை. நாலாயிரம் பெண்மணிகள் கொண்டதோர் பொதுக் கூட்டத்தில், அவர்களுடைய பங்கை எடுத்துரைத்து, தங்கள் நலனுயர பாடுபட வேண்டினர்.

1927-ம் வருஷம், டிசம்பர் 25ம் தேதி, பழமைக் கோட்டையின் மீது முதல் குண்டு தாக்கியது. அன்று தான் சமத்துவ சமூகவாழ்க்கை மற்றும் மனித உரிமைகள் பிரகடனம் வெளியாயிற்று (Declaration of equal civic and Human rights). கோடிக் கணக்கான தாழ்த்தப்பட்டோர், அப் பிரகடனத்தின் மூலம் தங்களுடைய திறன் உணர்ந்தனர்.

தேசிய காங்கிரஸின் சென்னை மாநாட்டின் போது, இந்தியர்களின் குறிக்கோள் இந்தியாவின் பூரணச்

சுதந்திரம் என்று தீர்மானிக்கப்பட்டது. தாழ்த்தப் பட்டோரின் குறிக்கோள் இந்தியர்கள் அனைவருக்கும் சம உரிமைகள் இருக்கவேண்டு மென்பதே யாகும். எனவே, அரசியல் மற்றும் சமூகத்துறைகளில் இரண்டு மாபெரும் உணர்ச்சிகள தட்டி எழுப்பப்பட்டு அசுர உருவம் பூண்டன.

1924-ம் வருஷத்தில் தான் தாழ்த்தப் பட்டோர் முன்னேற்ற வேலையில் அபரிமிதமான சுறு சுறுப்பு காணப்பட்டது. பிப்ரவரி 11ம் தேதி எர்வாடா சிறையினின்றும் விடுபட்ட மகாத்மா காந்தி, ஹரிஜனங்களின் பிரச்சினையை அகில இந்திய பரப்பில் ஆராயத் தொடங்கினர். அந்தமான் தீவுகளில் சிறையில் அவதி பட்ட தாமோதர் சவர்கார் கூட விடுதலை செய்யப்பட்டார். அவரும்கூட இந்து சமூகக் கூட்டுறவை கருத்தில் கொண்டு, சாதி மதப் பேய்களை ஓட்ட முனைந்தார்.

1924-ம் ஆண்டு மார்ச் 9ம் தேதி பம்பாய் தாமோதர் மன்றத்தில், டாக்டர் அவர்கள் ஒரு மாநாடு கூட்டினர். தாழ்த்தப்பட்டோர் நிலையை நன்கு ஆராய்ந்து அவர் தம் குறைகளை அரசாங்கத்திற்கு எடுத்துரைக்க ஒரு மத்தியக்குழு அவசியம் என்றுணர்ந்து, அக் குழுவை அமைக்கவே அம் மாநாடு கூட்டினர். அப்படித் தோன்றியது தான், பஹிஷ்கிரிட் ஹிதகரிணி சபா. ஆனல் இது மாகாணக் குழுவாகவே இருந்தது. பம்பாய் மாகாணத்தில் மட்டுமே இச் சபை இயங்குவதாயிற்று சபையின் முக்கிய குறிக்கோள்களாவன :

(i) தாழ்த்தப் பட்டோரிடையே கல்வியறிவு விருத்தி செய்வற்கான முறைகளை எடுத்-

தாள்வது. தங்கும் விடுதிகள் மற்றும் இவை போன்ற மற்ற அவசியங்களைச் செய்து கொடுப்பது.

(ii) புத்தக மன்றங்கள் (Libraries), இளைஞர் மன்றங்கள், சமூக சேவை குழுக்கள், போன்றவைகளை ஏற்படுத்தி, தாழ்த்தப் பட்டவரிடையே பண்பாட்டை வளர்பது.

(iii) பொருளாதாரத் துரையில் முன்னேற்ற மடைய தொழில் மற்றும் விவசாயப் பள்ளிகள் திறப்பது.

(iv) தாழ்த்தப் பட்டவரின் குறை பாடுகளை எடுத்துச் சொல்வது.

இச்சபையின் நிர்வாகக் குழுத் தலைவராக டாக்டர் அம்பேத்கரும், குழு அங்கத்தினர்களாக, பி. ஜி. கெர், டாக்டர் பரஞ்பை, செதல்வாட், சிவத்ர்கார், ஆகியோர் இருந்தனர். பெரும்பான்மையான குழு அமைச்சர்கள் தாழ்த்தப்பட்டவர் இனத்தினின்றுதான் வந்தவராயிருந் தனர்.

டாக்டர் அம்பேத்கர், சமூக சீர்த்திருத்தத்திற்கும் சமூக புனரமைப்புக்கும் இடையில், மிகவும் வேண்டத் தக்க வேறு பாட்டை ஏற்படுத்தினர். ரானடே போன் ரோர், விதவை மறுமணங்கள், பெண்கள் கல்வி, பெண் கள் பொருள் உரிமை போன்ற சீர்த்திருந்தங்கள் மூலம் சமூகச் சீர்த்திருத்தம் செய்யலாயினர். டாக்டர் அவர் களோவெனில், முழு இந்து சமூகத்தையே புனரமைப்பு செய்ய வேண்டினர். சமத்துவத்தை அடிப்படை யாகக் கொண்டு ஒரு புதுச் சமூகம் ஏற்படவேண்டு

மென எடுத்துரைத்தார். ஆனால் இத்தகைய புனரமைப்புச் செயலில் ஈடுபடக்கூடிய உறுதியும் தைரியமும் கொண்ட மக்கள் அநேகம் இருக்கவில்லை. ஒரு சில தலைவர்கள் தங்கள் துணிச்சலின் பலனாக, தாழ்த்தப்பட்டோர் நிலையை வெகுவாக உயர்த்தினர். கேரளத்தில் ஸ்ரீ நாராயண குருவின் இடைவிடா உழைப்பு இரண்டு கோடி தாழ்த்தப் பட்டவரை முன்னுக்கு கொண்டு வந்தது. அவருடைய சேவையை எவரும் மறக்கவோ, மறுக்கவோ முடியாது. எத்துணையோ உயர் குலத்தவர்கூட, இவர்கள் நிலைக்கிரங்கி, சேவை பல புரிவராயினர். இவர்கள் பெருமையை சரித்திரம் செப்ப மறக்காது, எனலாம்.

இந்திய தேசீய காங்கிரஸ், தீண்டாமையை ஒழிக்க வெகுவாக பாடுபடவில்லை என்று எண்ணினார் டாக்டர் அவர்கள். முதல் நாற்பது மாநாடுகளில் தீண்டாமைப் பிரச்சினையைப் பற்றி ஒரு வார்த்தைகூட பேசப்படவில்லை. அரசியல் சுதந்திரத்திற்கு முன்னர் சமூக சமத்துவம் ஏற்படவேண்டுமென அவர் எண்ணினார் எனவே அரசியல் சுதந்திரப் போராட்டத்தில் அவர் சேரவில்லை.

மகாத்மா காந்திஜி, உயர் குலத்தவரின் மனச்சாட்சியையும், உள்ளத்தையும் விளித்தார். சவர்கார், அவர்களது அறிவை விளித்தார். டாக்டர் அவர்களோவெனில், தாழ்த்தப் பட்டவரின் தன்மான உணர்ச்சிகளைத்தான் விளித்தார். இதில் ஒவ்வொரு முறையும் அவசியமே. எனினும், இம் மூன்று மாபெரும் தலைவர்கள் தங்களுக்கிடையே கருத்து வேற்றுமை கொண்ட

தை என்னென்பது? அது இந்தியாவின் துரதிருஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும்.

பஹிஷ்கிரிட் சபை மகராஷ்டிரத்தில் ஒரு சில கல்வி மற்றும் கலாச்சார சாலைகள் மூலம் சேவை செய்தது. தென்னுட்டில் பெரியார் ராமசாமி நாயக்கர், வைக்கம் ஊரில் இருந்த சில தெருக்களை ஹரிஜனங்கள். உபயோகத்திற்கு திறக்கப்படவேண்டுமென்று போராடினர். மற்றும் மதுரையில் முருகேசன் எனும் ஹரிஜன், கோயில் புகுந்து உயர் குலத்தவரை பகிஷ்கரித்தான். சிறை படுத்தப்பட்ட அவன் பின்னர் தண்டனையும் பெற்ருன். அம்பேத்கர் இந்நிகழ்ச்சிகளை ஆர்வத்துடன் கவனிக்கலானர்.

தொழிலில் டாக்டர் அவர்கள் முன்னேற்றமடைந்து கொண்டிருந்தார். பாட்லிபாய் அக்கௌண்டன்ஸி டிரெய்னிங் கல்லூரியில் அவர் பேராசிரியராகவும் தொண்டு புரிந்தார். தம்முடைய அறையில் அமர்ந்து, யோசனை கேட்கவரும் ஏழை மக்களுக்கு அன்புடன் ஆலோசனை கூறுவார். மற்றும் சமையலறையினுள் புகுந்து புத்தம் புது முறைகளில் தின்பண்டங்கள் செய்வதில் ஆர்வம் அதிகம், அவருக்கு, பலமுறை அவர் செய்த தின்பண்டங்கள் வெகு ருசியாக இருந்தனவாம்! அச் சமயங்களில் அவர் கைகொட்டி சிரித்து, ஆனந்திப்பதைப் பார்க்கவே சந்தோஷமாக இருக்குமென்று அறிந்தவர்கள் சொல்கிருர்கள்.

1928-ம் ஆண்டு டாக்டர் அவர்கள் இரு கல்விகற்கும் மாணவர் விடுதிகளை ஏற்படுத்தினர். மற்றும் தாழ்த்தப்பட்டோர் கல்வி மன்றத்தை ஆரம்பித்து, ஹரிஜன்

குழந்தைகளுக்கு கல்வி வசதி செய்ய முற்பட்டார். அரசாங்கம் கொடுத்த பணத்தில் இதை செய்ய முடியாது, டாக்டர் அவர்கள் பலரிடம் நன்கொடைபெற வேண்டியதாயிற்று. அரசாங்கப் பள்ளிகளில் தம் குலத்தவர் குழந்தைகளுக்காக பல முறை போராடினர். மற்றும் வேலை கிடைக்காமல் போன பல தாழ்த்தப் பட்டவருக்கு வேலை தேடித்தரவும் விழைந்தார். மகாத்மாவும் ஹரிஜனங்கள் மேம் பாட்டில் ஊக்கம் செலுத்தவே, அவர்கள் குறைகள் நீங்க வசதியாயிற்று.

அம்பேத்கர் பல்வேறு பாகங்களில் மாநாடுகள் கூட்டிப் பேசினர். நாடெங்கும் தீ பற்றிக்கொண்டது. அனைவரும் தாழ்த்தப்பட்டவர் முன்னேற்றமடைய வேண்டிய அவசியத்தை உணர்ந்தனர். பீரார் மாநாட்டில், அம்பேத்கர் அவர்கள் உயர்குல இந்துக்களுக்கு ஒரு எச்சரிக்கை விடுத்தார். தாழ்த்தப் பட்டவருக்கு சமத்துவம் அளிக்கப் படாதுபோயின், அவர்கள் மதம் மாறிவிடுவார், என்ற அவ்வெச்சரிக்கை பலரை விழிப் படையச் செய்தது.

பம்பாய் அரசாங்கம் ஏற்படுத்திய ஒரு ஆலோசனைக் குழு, தாழ்த்தப்பட்டோர் கல்வி வசதிகளை ஆராய்ந்து கூட முற்பட்டது. அக்குழுவினருள் ஒருவராக டாக்டர் அவர்கள் பெரும் பணியாற்றினர். ஊர் ஊராகச் சென்று, இன்னல்கள் பலவற்றுக்கிடையே பணிபுரியலானர் டாக்டர்.

1930-ம் ஆண்டு மார்ச் மாதம் 6ம் தேதி, மகாத்மா சத்தியாக்கிரகப் போரட்டத்தை ஆரம்பித்தார். இந்தியர்கள் அனைவரும் திரண்டு இப்போராட்டத்தில் ஈடுபட்

டனர். அதே வாரத்தில் தான் டாக்டர் அவர்கள் நாசிக் நகர ஆலயப் பிரவேசப் போராட்டத்தையும் துடங்கினர். மார்ச் 2ம் தேதி பதினைந்தாயிரம் பேர் இருந்த மாநாடு நடந்தது. இறுதியில் மாபெரும் ஊர்வலம் ஒன்று நாசிக் ஆலயத்தை நோக்கிப் புறப்பட்டது. பல பேச்சு வார்த்தைகளின் முடிவில், சமாதானப் பிரேரணையும் நிறைவேறியது. ஆலயத் தேரை இழுக்க இருதரப்பினருக்கும் உரிமை உண்டு என்ற இத்தீர்மானம் நிறைவேறியபின்பே கூட்டம் கலைந்தது. எனினும், தேர்திருவிழாவின் போது உயர் குலத்தவர் இவ்வுரிமையை மறுக்கவே, கைகலப்பு ஏற்பட்டு, ஆலயம் இருதரப்பாருக்குமே மூடப்பட்டு விட்டது!

மே மாதம் சைமன் கமிஷன் அறிக்கை வெளி வந்தது. தேசிய காங்கிரஸ் அதை வரவேற்கவில்லை. தாழ்த்தப்பட்டோர் மாநாடு ஒன்றில் அம்பேத்கர் அதை விமர்சித்து கூடவே கண்டித்தார். தம்மவர் நன்மையை கருத்தில் கொள்ளாது தயாரிக்கப்பட்ட அவ்வறிக்கையை வரவேற்க மறுத்தார். மற்றும், தாழ்த்தப்பட்டவர்களின் சமூக உரிமைகளுடன் அரசியல் உரிமைகளும் இருக்கவேண்டிய உண்மை உணர்ந்து, அகில இந்திய சுதந்திரப் போராட்டத்திலும் தாம் குதிக்கப் போவதாக சொற் பொழிவாற்றினர். இது காரணம் கொண்டு எக்காரணம் பற்றியும் இந்து மதத்தைவிட்டு வெளியேறுவதில்லை எனவும் முழங்கினர்.

இந்தச் பொற்பொழிவு, தேசியத் தலைவர்களின் நன்மதிப்பை பெற்றது.

———

## முதல் வட்டமேஜை மகாநாடு

1930-ம் ஆண்டில் ஆங்கிலேய அரசு, வட்ட மேஜை மகாநாட்டை லண்டனில் கூட்டியது. ஆங்கிலேய அரசு, ஆங்கில அரசியல் கட்சிகள் மற்றும் இந்தியப் பிரதிநிதிகள் கொண்ட இம் மகாநாட்டின் மூலம் இந்திய அமைப்புச் சட்டம் நிறைவேற்ற நினைத்தனர் நாடாள்வோர். மகாநாட்டிற்கு அழைக்கப் பட்டிருந்த பிரதிநிதிகளின் எண்ணிக்கையும் தரமும் சரியல்ல என்று எண்ணிய தேசிய காங்கிரஸ் மகாநாடு செல்ல மறுத்து விட்டது. தாழ்த்தப் பட்டவர் பிரதிநிதிகளாக டாக்டர் அம்பேத்கரும், ராவ்பகதூர் சீனிவாசனும் சென்றனர். மகாநாட்டிற்கு சென்ற அனைவரையும் தேசிய காங்கிரஸ் வெறுத்தது. அவர்கள் பரங்கியன் பாதம் பணிவோர் என்று பத்திரிகைகளில் எழுதியது.

நவம்பர், 12ம் தேதி மகாநாடு கூடியது. ராஜப் பிரதிநிதிகள், தொழிலாளிப் பிரதிநிதி, இந்து மகா சபையினர், முஸ்லிம் லீக் குழுவினர், தாழ்த்தப்பட்டோர் தூதுவர் ஆகியோர் கூடியிருந்தனர். தம்முடைய முறை வந்த சமயம் டாக்டர் அவர்கள் இடிமுழக்கம் செய்தார். பரங்கியன் கையாள் என்று கருதப்பட்ட டாக்டர் அவர்கள் ஆங்கில அரசு முறையை மிகக் கடினமாகக் கண்டித்தார். இந்தியாவினின்றும் அவர்கள் வெளியேறி, குடியரசு முறையில் இந்திய அரசு ஏற்பட வேண்டுமென்றார். இச்சொற் பொழிவு இந்தியாவில் பலத்த வரவேற்பு பெற்றது. தலைவர்கள் அவரைப் பற்றிய கருத்துக்களை மாற்றிக் கொண்டனர்.

மகாநாடு எதிர் பார்த்தபடியே தோல்வி கண்டது.

காரணம், இந்தியாவின் மிகப் பெரிதும், பலம் பொருந்தியதுமான தேசீய காங்கிரஸ் கட்சி, செல்லாததே. எனினும், டாக்டர் அவர்கள், தம்முடையவர் நிலையையும், அவர்களது குறைகளையும் எடுத்துச் சொல்லி, நிவாரணங்களையும் பிரரேபித்தார். அகில உலகும்கூட அவர் ஆணித்தரமான பேச்சில் மயங்கியதெனலாம்.

தாய் நாடு திரும்பியதும் (27-2-1931) நாசிக் கோயில் பிரவேச போராட்டத்தை, மீண்டும் துடங்கினர். நாசிக் நகர காங்கிரஸ் தலைவர் வெளிப்படையாகவே ஆலயத்தின் அதிகாரிகளுக்காகப் பரிந்து பேசினர். மகாத்மா, இந்தியச் சுதந்திரத்திற்குப் பின்னர் தான் ஆலயப் பிரவேசம் செய்வதாகக் கூறிவிட்டார்.

தேசிய காங்கிரஸிற்கும் தாழ்த்தப் பட்டவர் தலைவரான டாக்டர் அவர்களுக்கும் மிடையில் கசப்பேற்பட்டுவிட்டதை அனைவரும் உணர்ந்தனர்.

திரு. சிவராஜ் தலைமையில் கூடிய தாழ்த்தப்பட்டோரின் தலைவர்கள் டாக்டர் அவர்களது லண்டன் விஜயத்தை பாராட்டி போற்றினர். புகழ் மாலைகளை சுமக்கமாட்டாது சுமந்தார் டாக்டர்.

இச்சமயத்தில் தான் ஒரு முக்கிய நிகழ்ச்சி நடந்தது.

இந்திய வைசிராய் லார்ட் இர்வின் மற்றும் மகாத்மா காந்திஜி அவர்கள் பன்முறை சந்தித்து பேசினர்கள் இறுதியில், காந்திஜி சத்தியாக்கிரகப் போராட்டத்தை கைவிடுவதென்று முடிவு செய்ததுமின்றி (5-3-1931), இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டிற்கு செல்வதாகவும் வெளிப் படுத்தினர். பெடரல் அமைப்புச்

குழு (Federal Structural Committee) வில், வட்ட மேஜை மகாநாட்டில் டாக்டர் அவர்களும் இருப்பதாக வெளியானது பெரும் பான்மையோரை மகிழ்வித்தது.

பலதரப்பட்டவரின் கருத்துக்களை அறியவேண்டி மகாத்மா வெவ்வேறு தலைவர்களைச் சந்தித்துப் பேசினர் டாக்டர் அவர்களுக்கும் அழைப்பு வந்தது. ஆகஸ்ட் மாதம், 14ம் தேதி பகல் இரண்டு மணிக்கு மணிபவன விமான நிலையத்தில் இருவரும் சந்தித்தனர்.

சந்திப்பு நல்லபடியாக முடியவில்லை.

இருவரிடையிலும் கருத்து வேறுபாடுகள் பல விருந்தன. பரிவர்த்தனைக் கிடமில்லாமல் சந்திப்பு முடிந்தது.

செப்டம்பர் ஏழாம் தேதி மகாநாடு கூடியது.

தாழ்த்தப் பட்டோருக்காகப் பேச காங்கிரஸுக்கு உரிமை உண்டு என்று காந்திஜி வாதாடினர் சரித்திர காரணங்கள் முன்னிட்டு முஸ்லிம்கள் மற்றும் 'சிக்' வகுப்பினரை விலக்கி, மற்ற இந்துக்கள் அனைவர் பற்றியும் காங்கிரஸ் பிரதிநிதிகள் பேச உரிமை உண்டு என அவர் கருத்து கொண்டார். திரைக்குப் பின் காந்திஜியும் டாக்டர் அவர்களும் கூடிப் பேசினர் எனினும் கருத்துக்கள் ஒன்று படவில்லை. டாக்டர் அவர்கள் தமது பேச்சில், காந்திஜியின் 'உரிமை' யை கண்டித்துப் பேசினர்.

கடைசியில், சிறுபான்மை யோர் குழு ஒன்று படாததை எடுத்துக் கூறி, மகாத்மா பேசுகையில், இப் பிளவின் காரணம், மாநாட்டுப் பிரதிநிதிகள் மக்களால்

தேர்ந்தெடுக்கப் படாமையே என்று கூறினர். டாக்டர் அவர்கள் இதை மறுத்து, சமாதான உடன் படிக்கை ஏற்படாததின் காரணம் காந்திஜி என்றார்.

இந்தியாவிலிருந்த பல தாழ்த்தப் பட்டோர் சங்கங்கள், காங்கிரஸும் காந்திஜியும் தங்கள் பிரதிநிதிகள் அல்லவென்று பிரிட்டிஷ் முதலமைச்சருக்கு தந்தி கொடுத்தனர்.

இரு தலைவர்களையும் ஒன்றுபடுத்த பலர் முயன்றும் தோல்வி கண்டனர். தம்மையன்றி, வேறெவரும் தம் குலத்தவரின் பிரதிநிதி என்று சொல்லிக் கொள்வதை அறவே வெறுத்தார் டாக்டர் அம்பேத்கர். உறுதி, துணிவு, அறிவு கொண்ட இவ்விருவரும் கை கோர்த்து பாடுபட முடியாது போயிற்று.

தாழ்த்தப் பட்டோருக்காக தனிப்பட்ட தேர்தல் தொகுதிகள் கொடுத்தால் இந்துக்களிடையில் பிளவு காணும் என்றும், அப்பிளவு இந்தியச் சுதந்திர போராட்டத்தை பலவீனப் படுத்துமென்றும் மகாத்மா நினைத்தார்.

முஸ்லிம்களின் ஏராளமான வேண்டுதல்களை ஏற்றுக்கொண்ட காங்கிரஸ், தாழ்த்தப் பட்டவரின் ஒரு சில வேண்டுதல்களை ஏற்காமல் போனதை புரிந்துகொள் முடியாது தவித்தார் டாக்டர் அவர்கள்.

இத்தகைய பிளவுபட்ட சமயம், முதலமைச்சர், மகாநாட்டை முடித்துவிட்டார். பிரதிநிதிகள் அனைவரும் நாடு திரும்பினர்.

நூற்றைம்பது, சங்கங்கள், ஜனவரி இருபத்தொன்பதன்று, டாக்டர் அவர்களுக்கு பெரிய தோர் வரவேற்பளித்தது.

தாய் நாடு திரும்பியதுமே டாக்டர், லார்ட் லோதி யின் தலைமையில் உருவான வாக்குரிமை குழுவுடன் ஒத்துழைக்கலானார். தாழ்த்தப் பட்டவருக்காக தனித் தனி தேர்தல் நிலையங்கள் அவசியமா, மற்றும் அவர் களுக்கென ஒதுக்கப்பட்ட இடங்கள் போன்ற பிரச் சினைகளை ஆராய்ந்தது, இக்குழு. இந்து மகாசபை தலைவர் டாக்டர் மூங் அவர்களும், தாழ்த்தப் பட்டோர் தலைவர் எம். சி. ராஜாவும் கூடி ஒதுக்கப்பட்ட இடங் கள் மற்றும் கூட்டுத் தேர்தல் நிலையங்கள் வேண்டு மென்றனர். டாக்டர் அம்பேத்பர், தனித் தேர்தல் நிலையங்கள் வேண்டுமென்றார். பல தாழ்த்தப் பட்டவர் சங்கங்கள், ராஜா–மூங் கூட்டின் கருத்தை கண்டித்து டாக்டர் அவர்களை ஆதரித்தனர்.

மே மாதக் கடைசி வாரம், டாக்டர் அவர்கள் இங்கிலாந்து சென்றார். முதலமைச்சர் 'குலப்பிரிவுப் பிரகடன'த்தை (Communal Award) வெளியிடு முன்னரே, அவரையும் ஏனைய அமைச்சர்களையும் கண்டு பேசவே அவர் சென்றார். தம் அலுவல் முடிந்ததும், உடல் நிலையை விருத்தி செய்துகொள்ள ஜெர்மனி சென்றார். பின்னர், ஆகஸ்ட் மாதம் பம்பாய் வந்திறங் கிய மூன்று தினங்களுக்குப்பின், முதலமைச்சரின் பிர கடனம் வெளியாயிற்று.

எதிர் பார்த்தபடியே இந்தியாவில் பிளவுகள் ஏற் படுத்தியது, அப்பிரகடனம். முஸ்லிம்கள், சிக்குகள், ஐரோப்பியர், கிரிஸ்துவர், தாழ்த்தப் பட்டவர் ஆகி யோருக்கு தனித்தனி தேர்தல் நிலையங்கள் ஒதுக்கப் பட்டன. ஜனவரி 4ம் தேதியே மகாத்மாவை சிறை

யிலடைத் திருந்தனர் ஆள்வோர். பிரகடனம் கண்ட காந்திஜி, தாழ்ததப் பட்டோருக்கான தனித்தேர்தல் நிலையங்கள் ஒழிக்கப் படாதிருப்பின், சாகும் வரை உண்ணுவிரதம் இருப்பதாக வெளிப்படுத்தினுர். இந்தியா முழுவதும் இச் செய்தி கேட்டுத் துடித்தது. இந்துக்கள் வெகுவாக மனம் நொந்தனர். அனைவரும் டாக்டர் அம்பேத்கரிடம் திரும்பினர், இந்திய ஜோதியைக் காப்பாற்ற! கணக்கற்றவர் அவரைக் கண்டு பேசினர். தேசிய பத்திரிகைகள் அவரை எச்சரித்தன. டாக்டர் அவர்கள் தம்முடைய பழயை கருத்துக்களையே மீண்டும் மீண்டும் எடுத்துரைத்தார்

1932-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 19ம் தேதி இந்துத் தலைவர்கள் மாநாடு கூடியது. பண்டிட் மதன் மோஹன் மாளவியா தலைமையில் கூடிய மாநாட்டில் டாக்டர் அம்பேத்கரும், டாக்டர் சோலங்கியும் இருந்தனர். ராஜா, மூங் இருவரும் கூட பல் வேறு தலைவர்களுடன் கூடியிருந்தனர். டாக்டர் அவர்கள், காந்திஜி கூறுபவை என்னவென்று வினித்தார். அவற்றை அறிந்துவர ஒரு சிலர் எர்வாடா சிறை சென்றனர். காந்திஜி, சட்ட சபையில் சில இடங்களை தாழ்த்தப் பட்டவருக்காக ஒதுக்குவதில் தமக்கு ஆட்சேபணை இல்லை என்ருர்.

சர் டெஜ் பகதூர் சாப்ரு ஒரு விதி வகுத்தார். அதன்படி தாழ்த்தப் பட்டோர் ஒவ்வொரு இடத்திற்கு மூன்று நபர்களை தேர்தலுக்கு நிறுத்த வேண்டுமென்றும், அவர்களுள் ஒருவரை உயர்குல இந்துக்கள்

மற்றும் தாழ்த்தப்பட்டோர் கூட்டுத் தேர்தல் நிலையங்கள் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும் கூறப்பட்டது. டாக்டர் அவர்கள் இதை ஏற்று, மேலும் சில இடங்கள் தாழ்த்தப் பட்டவருக்காக ஒதுக்கப்படவேண்டும் என்றார். இதற்கு ஒப்புக்கொண்டு, ஜெயகர், சாப்ரு, பிர்லா, ராஜாஜி, ராஜேந்திர பிரசாத் ஆகியோர் காந்திஜியைச் சந்தித்தனர். டாக்டர் அவர்களை சந்திக்க காந்திஜி விரும்பவே, டாக்டர் எர்வாடா சிறை சென்றார்.

சிறையில் ஒரு மாமர நிழலில் கட்டிலின் மீது சோர்வுற்றுக் கிடந்தார் மகாத்மா.

“உங்களிடம் எனக்கு அன்பு உண்டு. நீங்கள் சொல்லும் விஷயங்களை நானும் அங்கீகரிக்கிறேன். ஆனால் நான் வாழ்வதில் நீங்கள் பெருமை படப்போவதாகச் சொல்கிறீர்கள் அல்லவா?” என்றார் மகாத்மா.

“ஆம் மகாத்மாஜி. நீங்கள் வாழ்ந்து எங்களுக்காகப் பாடுபட்டால் நாங்கள் பெருமை கொள்வோம் எங்கள் தலைவராக ஏற்று மகிழ்வோம்!”

“அப்படியானால் எனது உயிரைக் காப்பாற்ற என்ன செய்ய வேண்டுமென்பது உங்களுக்குத் தெரியும். அதைச் செய்யுங்களேன்! சாப்ரு வகுத்திருக்கும் திட்டத்தில் எனக்குச் சம்மதம். ஆனால் அத்திட்டத்தை எல்லா இடங்களுக்குமே ஏற்று, நடத்துவதில் ஏன் தயக்கம்? அதையும் செய்துவிடுங்கள். நாம் எல்லோரும் ஒன்றுபட்டால் தானே நல்வாழ்வு கிட்டும்?”

டாக்டர் அவர்கள் இதற்கு ஒப்புக் கொண்டார். உடனே தலைவர்கள் கூடி திட்டத்தின் நுணுக்கங்களை ஆராய்ந்தனர். இதிலும் கருத்து வேற்றுமைகள் கண்ட

னர். அப்போதெல்லாம், அவர்கள் காந்திஜியை அணுகி னுர்கள். டாக்டரின் கருத்துக்களையே காந்திஜி ஆதரித் தார். இறுதியில் திட்டம் உருவாயிற்று.

இருபத்திநான்காம் தேதி, சனிக்கிழமை, மாலை ஐந்து:மணிக்கு பிரபல பூனு கூட்டுமுறை ஒப்பமாயிற்று. ராஜாஜியும் அம்பேத்கரும் பேனுக்களை மாற்றிகொண் டனர்.

நவம்பர் மாதம் டாக்டர் இங்கிலாந்து சென்ருர். மூன்ருவது வட்டமேஜை மகாநாடு தோல்வியுடன் முடிந்தது. காரணம், முஸ்லிம்களின் கருத்துவேற்று மையேயாம்.

மத்திய சட்ட சபையில் தீண்டாமை ஒழிப்புச் சட்டத்தை ரங்கஐயர் கொண்டு வந்தார். அதே சட் டத்தை ஏனைய சட்ட சபைகளும் கொண்டு வந்தன. இதற்குள் காந்திஜி தமது ஹரிஜன் பத்திரிகையை ஆரம்பித்தார். முதல் இதழில் டாக்டர் அவர்களின் கட்டுரை ஒன்று வெளியாயிற்று.

ரங்க ஐயரின் சட்டப் பிரேரணையை அம்பேத்கர் ஆதரிக்க மறுத்து காரணம் கூறுகையில், அச்சட்டம் தீண்டாமையை ஒரு பாபம் என்று கூருமல் விட்டதே என்ருர். பெருவாரியான மக்கள் எதைச் செய்தாலும் அது தகும் என்று கூறுவது மடமை என்ருர். தீண்டா மையை ஒழிக்க இத்தகைய சட்டங்கள் போதாதென் றும் முழங்கினுர்.

ஆலயப் பிரவேச போராட்டத்தில் நம்பிக்கை யிழந்துவிட்ட டாக்டர், தம்மவர் மேம்பாட்டில் மட்டுமே கருத்துச் செலுத்தலானுர்.

1933, மார்ச் மாதம், ஆங்கில அரசு, இந்திய அரசியலமைப்பு சீர்த்திருந்தங்கள் செய்ய தீர்மானித்து, டாக்டர் அவர்களை ஒத்துழைக்க அழைப்பு விடுத்தது. இங்கிலாந்து செல்லுமுன்னர், டாக்டர் காந்திஜியிடம் பன்முறை பேச்சு வார்த்தை நடத்தினர். இங்கிலாந்தில், இந்துக்கள் அனைவரும் ஒன்று என உயர்குலத்தவர் உண்மையாக கூறுவராயின், தம்மவர் அவர்களுடன் இதயபூர்வமாக கூடுவதில் தடை ஏதுமில்லை என்று கூறினர். இச்சொற் பொழிவை கேட்டு மகிழ்ந்த டாக்டர் மூங், இந்துமகா சபையின் தலைமைப் பதவியை அம்பேத்கருக்கு அளிப்பதாகச் சொன்னர்.

1934-ல், பம்பாய் சட்ட கல்லூரியில் பேராசிரியர் பொறுப்பை ஏற்றுக்கொண்டார் டாக்டர். அதுவு மன்றி 'ராஜகிருகம்' எனும் மனைகட்டி குடி புகுந்தார்.

இந்த ஆண்டில் டாக்டர் அவர்களுக்கு ஒரு பெருத்த நஷ்டம் ஏற்பட்டது. அவரது மனைவியார் நோய்வாய்ப் பட்டுக் கிடந்தார். 1935ம் ஆண்டு, மே 27ம் தேதி ரமாபாய் விண்ணுலகெய்தினர். டாக்டர் அவர்கள் தம்முடைய ஒரே ஊன்றுகோலை இழந்து தவித்தார். இலட்சியப் பெண்மணியாகத் திகழ்ந்த ரமாபாய் எல்லா விதங்களிலும் பெருமை பூண்டு புகழ் தேடினர். புகழு டம்பு பெற்றுர்.

ஏழை பணக்காரர் அனைவரும் அவர் வீட்டில் கூடினர். டாக்டர் அவர்கள் சிறு குழந்தையென அழு தார். வாழ்க்கைக் கடலில் அவரது குடும்பப் படகை ஓட்டிவந்த மாலுமி மறைந்து விடவே, என்செய்வ

தென்றறியாமல் திசைதவறி தவித்த டாக்டரின் நிலை பார்க்கப் பரிதாபமாகத் தானிருந்தது!

1935, ஜூன் மாதம் சட்டக்கல்லூரி முதல்வரானர் டாக்டர்.

யோலா மாநாட்டில் தாம் இந்துவாக இறப்பதில்லை என்று சபதம் பூண்டார் டாக்டர். ஆலயப் பிரவேசப் போராட்டத்தில் தங்களுடைய பொழுதை வீணடிக்க வேண்டாமென தம்மவரைக் கேட்டுக் கொண்டார். இதுகண்டு பல்வேறு மதத்தவர் தத்தம் தூதுவரை அவர் பால் அனுப்பினர், மதமாற்றத்திற்காக! காந்திஜி, சவர்கார், சீனிவாசன் ஆகியோர் அனைவரும் அம்பேத்கரை எச்சரித்தனர். டாக்டர் அவர்கள் எவர்க்கும் சொல்லாமல் மறைவாக இடம் தேடிச் சென்றுவிட்டார். பலர் இதை அரசியல் தந்திரம் என்றனர். மதமாற்றம் செய்வதாகச் சொன்னாலாவது இந்து மதத்தவரின் உயர் வகுப்பினர் மனம் மாறுவார்களோ வென்று தான் டாக்டர் அவர்கள் இங்கனம் சொல்லியதாகத் தெரிகிறது.

இச் சூழ்நிலையில் தான் மாகாணச் சுயாட்சிக்கு இந்தியா தயாராகிக் கொண்டிருந்தது. ஜே. மெஹ்தா என்பவருடன் சேர்ந்து டாக்டர் அவர்கள், 1936 ஆகஸ்ட் மாதம் இந்திய தொழிற் கட்சியை ஆரம்பித்தார். நிலச்சீர்த்திருத்தம், விவசாய முன்னேற்றம், தொழிலாளர் முன்னேற்றம், முதலியவை கட்சியின் குறிக் கோள்களாக காணப்பட்டன.

1937-ம் ஆண்டு பிப்ரவரி 17ம் தேதி தேர்தல்கள் நடந்தன. இந்தக் கட்சி நிறுத்திய பதினேழு பேர்களில்

பதினைந்து பேர் வெற்றிகண்டனர். காங்கிரஸ் தலைவர்கள் மந்திரி சபை அமைக்க முன்வந்தனர்.

தொழிலாளர் தலைவராக டாக்டர் அவர்கள் கம்யூனிஸ்டுகளுடன் உடன்பாடு செய்து கொள்ளவில்லை. தங்கள் சுயநலத்திற்காக, தொழிலாளரின் பலத்தை உபயோகித்துக் கொள்ளும் இவர்களை டாக்டர் வெறுத்தார். காந்திஜியின் விவசாயி முன்னேற்ற முறைகளையும் இவர் ஆதரிக்கவில்லை. இரண்டு எருதுகளுடன் மூன்றுவது எருதாக உழைக்க விவசாயிகள் விரும்பமாட்டார் என நம்பினர் டாக்டர். கொங்கண் பிரதேசத்திருந்த கோதி முறை (Khoti System) யை ஒழித்து ரயட்வாரி (Ryotwari System) முறையை ஆதரிக்குமாறு ஒரு பிரேரணையை சட்டசபையில் கொண்டு வந்தார் டாக்டர்.

ஷோலாபூர் பிரதேசத்தில் கிறிஸ்துவர்களிடையே பேசுகையில், டாக்டர் அவர்கள் தம் மனங்கவர்ந்த இரு பெரியார்கள், புத்தரும் ஏசுவும் என்றார். பிற்காலத்தில் அவர் வாழ்க்கையில் கண்ட மாறுதல்களை கவனிக்கும் இச் சொற்கள் பன்மடங்கு முக்யத்வம் பெறுகின்றன.

டாக்டர் அவர்கள் தொழிற் கட்சி மூலம் தொழிலாளர்களுக்காகப் போராடினர். எத்துறையில் புகுந்தாலும் அத்துறையில் பெருமை பெறுவதை கண்கூடாகநிரூபித்த டாக்டர் அவர்களின் புகழ் நாடெங்கும் பரவியது. தொழிற் கட்சி தலைவர் டாக்டர் அம்பேத்கர், தாழ்த்தப் பட்டோர் வகுப்புத் தலைவர் டாக்டர் அம்பேத்கர், ரயில்வே தொழிலாளர் சங்கத் தலைவர்

டாக்டர் அம்பேத்கர்—என எவண் செல்லினும் சிறப்பு பூண்டு பெருமை கொண்டார் அவர்.

---

## 6

இரண்டாவது உலக மகா யுத்தம் ஆரம்பமாயிற்று வைஸ்ராய் லார்ட் லின்லித்கோ, இந்திய அரசியல் கட்சித் தலைவர்களைக் கண்டு பேசி ஒரு அறிக்கை வெளியிட்டார். அரசியல் சீர்த்திருத்தங்கள் யாவும் யுத்தம் முடிந்தபின்னர் கவனிக்கப் படுமென்றும், சிறுவாரிக் கட்சியினரைக் கலக்காமல் ஏதும் செய்வதில்லை யென்றும் அவ்வறிக்கையில் கண்டிருந்தது. அறிக்கையை ஏற்றுகொள்ளாத காங்கிரஸ், 19 9ம் வருஷம் நவம்பர் மாதம், மந்திரி மண்டலங்களைக் கலைத்து விட்டது மிஸ்டர் ஜின்னு 'டெலிவரன்ஸ் டே' (Deliverance Day) யைக் கடைபிடித்தார். டாக்டர் அம்பேத்கரும் அவருடன் சேர்ந்து கொண்டார். இதன் கோர விளைவுகள் யாவரும் அறிந்தவையே. மீண்டும் இங்கு குறிப்பிடவேண்டிய அவசியம் இல்லை என்று கருதுகிறோம்.

1940, அக்டோபர் மாதம் உலக யுத்த நடவடிக்கைகளில் பங்கு பெறுவதில்லை எனக்கூறி சுயசத்தியாக்ரகம் செய்தார். மகாத்மா (Individual Satygraha) எங்கும் யுத்தத்தின் பயங்கர விளைவுகள் கோரத் தாண்டவமாடின.

இதே வருஷம்தான் டாக்டர் அவர்களின் மிக முக்கியமானதோர் புத்தகம் வெளியாயிற்று. "பாகிஸ்

தானைப் பற்றிய கருத்துக்கள்,'' எனும் இப்புத்தகத்தில் இந்துஸ்தான் —பாகிஸ்தான் பிரிவினையைப்பற்றி அலசி ஆராய்ந்து தம் எண்ணங்களை வெளிப் படுத்தியிருந்தார். பிரச்சினையை ஆதரித்து, பிரிவினை இந்தியாவின் சாந்திக் கும் முன்னேற்றத்திற்கும் அடிகோலி உதவும் என்று கூறியிருந்தார். இந்துஸ்தான் முஸ்லிம்கள் பாகிஸ் தானுக்கும் அங்குள்ள இந்துக்குள் இந்துஸ்தானுக்கும் பரிவர்த்தனை செய்து கொள்ளவேண்டுமென்றார்.

டாக்டர் அவர்கள், பிரிவினை அகில உலக அரங்கில் நம் நிலை என்னாகும் என்பது பற்றி கருத்து செலுத்த வில்லை. மேலும் பரிவர்த்தனை மூலம் ஏற்படும் கஷ்டங் களையும் கணக்கிலெடுத்துக் கொள்ளவில்லை சைமன் கமிஷன் முன் சாட்சி கூறியபோது முஸ்லிம்களுக்கு தனித்தேர்தல் தொகுதிகள் ஏற்படுவதை எதிர்த்திருந் தார் டாக்டர். ஆனால் இப்பொழுது பிரிவினை வேண்டு மென்ற ராஜாஜி அப்பொழுது அங்கனம் கூறியிருக்க வில்லை.

புத்தகம் எல்லாருடைய கவனத்தையும் ஈர்த்தது. பல்வேறு பதில்கள் வெளிவந்தன. ஜின்னாவும் அவரது முஸ்லிம் லீக் தோழர்களும் தங்கள் கருத்தை ஆதரித் தெழுதிய அம்பேத்கரைப் புகழ்ந்தனர். சைமன் கமிஷன் முன் ஜின்னாவின் இரு தேசப் பிரிவினையைக் கேலி செய்த டாக்டர், இப் புத்தகத்தில் தமது எண்ணங்களை மாற்றிக் கொண்டதாகத் தெரிகிறது. இந்து முஸ்லிம் ஒற்றுமையை மகாத்மா எவ்வளவு ஆதரித்தும், பிரிவு காணத்தான் செய்தது அத்தகையப் பிரிவில் தான் ஒற்றுமை காணமுடிந்தது. டாக்டர் அவர்களும்

இதைத் தான் தமது புத்தகத்தில் விளக்கியிருந் தார்.

1941, ஜூலை மாதம் வைஸ்ராய் 'தற்காப்பு ஆலோசனைக் குழு' (Defence Advisory Committee) ஒன்றை ஏற்படுத்தினர். டாக்டர் அம்பேத்கர் அவர்கள் இக் குழுவில் இடம் பெற்றார். இப் பதவியில் அவர் புரிந்த சேவைகள் பல. இந்நிலையில் தான் அவரது மிகவும் போற்றப்பட்ட, "இந்துக்கள் நமக்குச் செய்திருப்பவை" (What the Hindus have done to us) எனும் புத்தகம் வெளியாயிற்று. பிடிவாதம் பிடித்த பழமை புரக்கும் பெரியோர்களுக்குச் சாட்டையடிகளென கருத்துக்களை ஒளிவு மறைவின்று எடுத்துச் சொல்லியிருந்தார்.

இந்தியாவில் அரசியல் குழப்பங்கள். உச்சநிலையடைந்து விட்டிருந்தன. குழப்பங்கள் தீர்க்க சர் ஸ்டாப்போர்ட் கிரிப்ஸ் (Sir Stafford Cripps) இந்தியா வந்தார். அவர் கொடுத்த வாக்குறுதிகளை அரசியல் கட்சிகள் மறுத்து விட்டன. டாக்டர் அவர்களும் தம் தோழர்களுடன் கலந்து, பின்னர், மறுத்துவிட்டார்.

ஏப்ரல் பதினன்கன்று டாக்டர் அவர்கள் ஐம்பது வயதினர். சுதந்திர தொழிற் கட்சி, இது குறித்து ஒன்பது நாட்கள் விழா நடத்தினர். எம். சி. ராஜாவும் ராஜ்போஜ் அவர்களும் டாக்டரைப் பிரிந்து சென்று விட்டிருந்தனர் என முன்னர் கூறப்பட்டது. விழாவின் போது இருவரும் டாக்டருடன் மீண்டும் நட்பு கொண்டு அவரது அன்புக்குரியவராயினர். தாழ்த்தப்பட்ட பெண்மணிகளுக் கென ரோஹிதாஸ் டாரம்

சுதாரக் சங்கத்தை இப்பொன் விழாவன்று டாக்டர் ஆரம்பித்துவைத்தார். எவண் நோக்கினும், எவர் கேட்கினும் டாக்டரவர்களது பெருமை பறைசாற்றப் பட்டவண்ண மிருந்தன, பத்திரிகைள் தலையங்கங்கள் எழுதி அன்னாரைக் கௌரவித்தன. "தாழ்த்தப்பட்ட வரிடையே இத்தகைய இரும்பு உறுதியும், அன்பு உள்ளமும் கொண்ட பெருந்தலைவர் தோன்றியிருப் பதே, தாழ்த்தப்பட்டவர் நிலை உயரத்தான்!" என்று வீரமுழக்கம் செய்தார் சவர்கார். விழாச் சொற்பொழி வொன்றில் டாக்டர் பேசுகையில், தாழ்த்தப் பட்ட வர்கள் இந்துக்கள் என்று மதிக்கப்பட்டு எல்லா இந்துக் களும் ஒன்றேயென எண்ணப்படுதல் வேண்டுமென் பதே தமது வாழ்க்கை இலட்சியம் என்றும் அது ஈடேறி விட்டால் பின்னர் தம்மவர் அனைவரும் இந்துக்களின் பொதுப் பகைவரை முறியடிக்கும் வேலையிலீடுபடுவர் என்றும் கூறினர்.

1942 ஜூன் மாதம் வைஸ்ராயின் நிர்வாகக் குழு விஸ்தரிக்கப்பட்டது. அதில் டாக்டரவர்களும் இடம் பெற்றார். தாழ்த்தப்பட்டவர் ஒருவர் அத்தகைய பதவி வகிப்பது அதுவே முதல் முறையாகும். டாக்டரவர் களுக்கு இப்பதவி கிட்டாதிருப்பினும், பம்பாய் உயர் நீதி மன்றத்தின் நீதிபதியாக பதவி கிடைத்திருக்கும் மென்பதில் ஐயமில்லை. அவரது புதுப்பதவி பற்றி பல வாழ்த்துக்கள் பொதுக் கூட்டங்களில் அளிக்கப் பட்டன.

அலுவல்கள் பல வற்றிற்கிடையிலும் தம் குலத் தவர் முன்னேற்றத்திற்காக உழைத்தார் அவர். பல்

வேறு கூட்டங்களில் தோன்றி பிரசங்கம் செய்தார். அன்றுவரை நடந்த எல்லா தாழ்த்தப் பட்டோர் மாநாடு களிலும் மிகமிகப் பெரியதோர் மாநாடு 1942 ஜூலை மாதம் நாகபுரியில் நடை பெற்றது. இந்த அகில இந்திய தாழ்த்தப்பட்டோர் மாநாட்டில் பேசுகையில் டாக்டரவர்கள், தாங்கள் தனி தேசத்தவர் என்று கூறி சிறுபான்மைக் கட்சிகளினின்றும் பிரிந்து போன முஸ்லிம் லீக் கட்சியை, கண்டித்தார். இம் மாநாட்டில் அகில இந்திய ஷெட்டியூல்ட் வகுப்பு பெடரேஷன் அமைக்கப்பட்டது. இம் மாநாட்டில் அவர் அங்கம் வகிக்கும் போதுதான் வைஸ்ராயிடமிருந்து நிர்வாகக் குழுவில் தொழிற் பகுதியை அவருக்களித் திருப்பதாகச் செய்தி வந்தது.

ஆகஸ்ட் மாதத்தில் மகாத்மாவின் 'க்விட் இந்தியா' சத்தியாக்கிரகம் ஆரம்பமாயிற்று. வைஸ்ராய் அளித்த பதவியை ஏற்றுகொண்ட டாக்டரின் செயல் நாட்டுத் துரோகச் செயல் என்று காங்கிரஸ் எண்ணியது. இப் புதுப் பதவியில் டாக்டரவர்கள் தொழிலாளர் நலனுக் காகப் பாடுபட்டார். சுயராஜ்யம் வந்ததும் தொழிலாளர் அரசாங்கம் ஏற்படுதலவசியம் என்று அவர் எண்ணு வராயினர்.

1943, பிப்ரவரி 10ம் தேதி மகாத்மா இருபத்தி யொருநாள் உண்ணுவிரதம் ஆரம்பித்தார். நாடெங்கும் மகாத்மாவின் விடுதலைக்காகப் பலத்த போராட்டங் கள் நடந்தன. மகாத்மா விடுதலை செய்யப்பட்டதும். தன. நாடெங்கும் அரசியல் கட்சிகள் சுறுசுறுப் படைந் காங்கிரஸ் கூறிய வையனைத்தையும் எதிர்த்த

ஜின்னு, காங்கிரஸின் புதுப்பிரிவு முறையையும் ஏற்க வில்லை.

டாக்டரவர்களின் பாகிஸ்தானைப் பற்றிய கருத்துக் கள் நாளொரு வண்ணம் பொழுதொரு மேனியாக மாறிக்கொண்டே வந்தன. அவரது முன் குறிப்பிட்ட புத்தகம் இரண்டாவது முறை அச்சாகியது. இம்முறை இருதேசப் பிரிவினையை எதிர்த்திருந்தார் அவர்–நாளு க்கு நாள் மாறிவந்த இந்திய அரசியல் சூழ் நிலைக்குத் தக்கவாறு தம் கட்சி இயங்கவே டாக்டரவர்கள் இங்கனம் மனம் மாறிய வண்ணமிருந்தார் என நினைக் கிறேன்.

செப்டம்பர் மாதம் அவர் சென்னை சுற்றுப் பிர யாணம் மேற்கொண்டார். அப்பிரயாணத்தின் போது அவர் பேசுகையில், புத்த மதத்தின் சரித்திர முக்கியத் வத்தைப் பற்றியும் அம்மதத்தின் பெருமைகளையும் எடுத்துச் சொன்னர். பிற்காலத்து தம்முடைய சொந்த வாழ்க்கையில் நடைபெறப் போகும் பெரிய மாறுதலை அவர் அப்போது அறிந்திருந்தால்?

ஜனவரி மாதம் டாக்டர் கல்கத்தா சென்று, ஷெட் டியூல்ட் வகுப்பினரின் குரலாக ஒலித்த பீபுல்ஸ் ஹெ ரல்ட் பத்திரிகையை ஆரம்பித்து வைத்தார். அங்கு தான் அவர் மீண்டு மொருமுறை மனக் கஷ்டப்படும் படி நடந்தது. டி. ஜி. ஜாதவ் என்பவரின் விருந்தின ராகச் சென்றிருந்த உயர்திரு தொழில் அங்கத்தினர் டாக்டர் அம்பேத்கருக்கு, ஜாதவ் வீட்டுப் பணியாட்கள் சேவை செய்ய மறுத்துவிட்டனர். காரணம், அவர் தீண்டாப்படாதோர்!

1945, ஜூன் மாதம் டாக்டர் மற்றுமொரு புத்தகம் வெளியிட்டார். "தாழ்த்தப் பட்டவருக்கு காங்கிரசும் காந்தியும் செய்திருப்பவை" என்ற இதில் புள்ளி விவரங்களுடன் தமது எண்ணங்களை வெளிப்படுத்தி யிருந்தார். மகாத்மா இந்து சமூகத்தில் ஏற்படுத்திய புரட்சிகளை டாக்டரவர்கள் சரியாக மதிப்பிடாதது வருந்தத்தக்கது. புத்தகத்தில் விரும்பத்தகாத, விலக்கத் தக்கப் பகுதிகள் பல இருந்தன. எனினும் தாழ்த்தப் பட்டவர் குறைகளை மேலும் வற்புறுத்த இப்புத்தகம் ஏதுவாயிற்று.

அதே சமயம்தான் லார்ட் வேவல் தம் நாட்டு அமைச்சர்களுடன் கலந்துவிட்டு, இந்தியா திரும்பினர். இந்தியாவிற்குத் தம்முடைய, எதிர்கால அட்டவணை யை வெளியிட்டார். எல்லா காங்கிரஸ் தலைவர்களும் விடுதலை செய்யப்பட்டனர். சிம்லாவில் மாநாடு கூடியது. இதற்கிடையில் இங்கிலாந்தில் தொழிற்கட்சி தேர்தலில் வெற்றி பெற்று, க்ளெமண்ட் அட்லி முதலமைச் சரானுர். இந்தியாவிலும் வைஸ்ராய் 1945 ஆகஸ்ட் மாதம் தேர்தல்களை அறிவித்தார். டாக்டரவர்கள் ஷெட்டியூல்ட் வகுப்பு பெடரேஷனுக்காக நாடெங்கும் தேர்தல் பிரச்சாரம் செய்தார். எனினும் அவரது கட்சி படுதோல்வி கண்டது. உண்மையான எதிர்ப்பு முஸ்லிம் லீக் கட்சிக்கும் காங்கிரஸ் கட்சிக்கு மிடையில் தான் இருந்தது. இறுதியில் காங்கிரஸ் டாக்டர் கட்சியையும், இந்து மகா சபையையும் மண் கவ்வச் செய்தது.

அரசியல் நிகழ்ச்சிகள் விரைந்து ஓடின. இந்தியா வின் சுதந்திர கோரிக்கையை ஏற்று ஆதரித்தார் க்ளெ

மண்ட் அட்லி. இந்திய ராணுவம், இந்திய கடற்படை மற்றும் விமானப் படையினரின் கலகங்களே இதற்கு உடனடிக் காரணம் என்று சொல்லப்பட்டது. ஆங்கில அமைச்சர் குழாத்தின் பிரதிநிதிகள் இந்தியா வந்தனர். 1946, மார்ச் மாதம் இந்தியத் தலைவர்களுடன் கலந்தாலோசித்தனர். டாக்டர் தமது குலத்தவர் விருப்பு வெறுப்புகளை எடுத்துரைத்தார். முடிவில் மே மாதம் அறிக்கை வெளிவந்தது. அதில் ஷெட்டியூல்ட் வகுப்பு பெடரேஷனின் கோரிக்கைகள் இடம் பெறவில்லை. வைஸ்ராய் தமது மந்திரி சபையைக் கலைத்துவிட்டார். டாக்டர் அவர்கள் பம்பாய் திரும்பினார். அங்கு தம்மவர்களுக்கும் உயர் குலத்தவருக்கும் இடையில் கைகலப்புகள் நடந்தபடியிருந்தன. அவரது மகன் நடத்தி வந்த பாரத் பூஷன் அச்சுக்கூடம் கைகலப்புகளில் சுட்டுத் தள்ளப்பட்டது. டாக்டர் அம்பேத்கர், பெடரேஷன் காரியக் கமிட்டியைக் கூட்டினார். கமிட்டி ஆங்கில அரசினரின் அறிக்கையைக் கண்டித்து, நேரடி நடவடிக்கைகள் எடுப்பதாக பயமுறுத்தியது.

---

## 7

அரசியல் முயற்சிகளில் தோல்வியும், நிர்வாக வேலைகளில் திடீர் நிறுத்தமும், டாக்டர் அம்பேத்கர் அவர்களின் மற்றுமோர் லட்சியத்தை ஈடேற துணை புரிந்தன. தம் குலத்தவருக்காக மக்கள் கல்வி மன்றம்

(People's Educational Society) எனும் கல்விக் கழகத்தை நிறுவினர். 1946ம் வருஷம் ஜுன் 20ம் தேதி யன்று ஒரு கல்லூரியைத் துவக்கினர். வேண்டிய பணத்தை சேர்த்ததுமன்றி ஆர்வங்கொண்ட கல்விமான் களையும் ஒன்றுகூட்டினர். இதுதான் பிரபல சித்தார்த் கல்லூரி.

தாழ்த்தப்பட்டோர், தத்தம் அரசியல் உரிமைகளை நிலைநாட்ட, கிளர்ச்சி செய்யலாயினர். திரு. ராஜ்போஜ், பூனுவில் காந்திஜியை சந்தித்துப்பேசி, காங்கிரஸ் ஹரி ஜன் தலைவர்கள், தாழ்த்தப்பட்டவரின் தேர்ந்த பிரதி நிதிகள் அல்லவென்று எடுத்துரைத்தார். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கூட்டத்தின் பொது இவ்வகுப் பினர் கறுப்புக்கொடி காட்டினர். அமைதியாகவே சத்தியாக்கிரகங்கள் பற்பல இடங்களில் நடைபெற்றன. தற்காலத்திய தேர்தல் முறையில், உண்மையான தாழ்த் தப்பட்டவர் தலைவர்கள், காங்கிரஸ் தலைவர்களை வெல்லு தல் சாத்தியமன்று எனப்பேசினர் டாக்டர். சத்தியாக் கிரகம் வெற்றிகண்டது. இந்திய தேசிய காங்கிரஸ் டாக்டர் அம்பேத்கருடன் ஒரு உடன் படிக்கை செய்ய முன்வந்தது. ஆயினும், இம்முயற்சி தோல்வியே கண்டது.

இதற்கிடையில் 'கான்ஸ்டிடுயண்ட் அசெம்பிளி' ஏற்பட்டது. வங்காள மாகாண சபை மூலமாகவும், முஸ்லிம் லீக் உதவியுடனும், டாக்டர் அவர்களின் பெயர் பிரரேரிக்கப் பட்டது.

தேர்தலில் வெற்றியும் கண்டார். இடைகால அமைச்சர் குழாம் (Interior Ministry) ஏற்பட்டதும்,

அதில், பீஹார் தாழ்த்தப்பட்டோர் தலைவர் ஜகஜீவன் ராம், இடம் பெற்றார். முஸ்லீம் லீக் குழாத்தினை விட்டு விலகியே நின்றது. தாழ்தப்பட்டோர் மன்றம், தனது அதிருப்பதியை தெரியப் படுத்தி, ஜகஜீவன் ராமை, மந்திரி பதவியை மறுக்குமாறு கேட்டுக்கொண்டது. அடுத்த மாதமே, மன்றம், நாகபுரியில் பெரியதோர் சத்தியாக்கிரகம் செய்தது. அச்சமயம் சுமார் 800 பேர் கைது செய்யப்பட்டனர். ஆயினும் எதிர் பார்த்த மாறுதல்கள் கிட்டவில்லை. நடைபெற்றது வரை சத்தியாக்கிரகத்திற்கு மதிப்பு இருந்தது டாக்டர் அவர்கள் இதுசமயப், இங்கிலாந்து சென்று, ஆட்சி புரிந்து கொண்டிருந்த தொழிற் கட்சியினருக்கு தம் குறைகளை எடுத்துச் சொல்ல, முடிவு செய்தார். அவர் தயாரித்த அறிக்கையில், 1935 சட்டத்தை அமுல் செய்து பத்து வருடங்கள் கழித்து இந்தியாவின் கட்சிகளுக்கு ஐக்கிய இந்தியாவை அளிக்குமாறு கண்டிருந்தது. பத்து வருஷ ஆங்கிலேயர் ஆட்சி நீடிப்பு அறிக்கையை இந்திய மக்கள் எதிர்த்ததில் வியப்பில்லை. டாக்டர் இம் முயற்சியிலும் தோல்வி கண்டார்.

தீண்டப்படாதோர் இந்து மதத்திலேயே இருக்க வேண்டுமென்றும், இந்து மதத்தில் சில சீர்த்திருத்தங்கள் செய்தல் வேண்டும் என்றும் ஒரு பத்திரிகை சந்திப்பில் வலியுறுத்தினர். இது சமயம்தான் அவரது பிரபல "சூத்திரர்கள் யார்"? என்ற புத்தகம் வெளிவந்தது. எப்பொழுதும் போல, இப் புத்தகத்தில் தம்முடைய கல்வி ஞானத்தை வெளிப் படுத்தியிருந்தார்.

ஆட்சி முறை கைமாறவேண்டிய காலம் நெருங்கியது. டாக்டர் அவர்கள் தம்முடைய அரசியல் கருத்துக்கள் அடங்கிய அறிக்கை ஒன்றை வெளியிட்டார். கம்யூனிசம் அவர் கருத்தைக் கவரவில்லை. ஆன்மீக சோஷலிசம் என்று வேண்டுமாயின் அவர் அரசியல் தத்துவத்தை விளக்கலாம்.

நாட்டில் குழப்பங்கள் அதிகமாயின. எனினும் அசெம்பிளி இடைவிடாது உழைத்தது—1947, ஏப்ரல் மாதம் 27ம் தேதியன்று, 'தீண்டாமையை ஒழித்து விட்டோம் எந்த முறையிலும் தீண்டாமையை கடைபிடிப்பவர்களுக்கு உரிய தண்டனை விதிக்கப்படும்' என்று தீர்மானித்தது. இத் தீர்மானத்தைச் சர்தார் பட்டேல் கொண்டுவந்தார். இந்தியத் தாயின் சுந்தர வதனத்தை பாழ் படுத்திக் கொண்டிருந்த கரும்புள்ளியை, அரசாங்கம் அகற்றிவிட்டது. உலகெங்கும் இச் சட்டம் வரவேற்கப்பட்டது. டாக்டர் அவர்களின் நீண்டகால லட்சியம் நிறைவேறுவதை, அவரே கண்டு களிப்புற்றார்.

லார்ட் வேவல் துரைக்குப் பின் வைஸ்ராயாக வந்த லார்ட் லூயி மௌண்ட் பேட்டன், 1947, ஜூன் மாதம் மூன்றும் தேதி, இந்திய சுதந்திரத்தைப் பற்றிய தமது கருத்தை வெளியிட்டார். பிரிவினையை அடிப்படையாகக் கொண்டது இக் கருத்து. இது குறித்து டாக்டர் அவர்கள் எச்சரிக்கை விடுத்தார். பிரிவினைக்காக எல்லைக் கமிஷன் வகுத்துள்ள எல்லைகள் இயற்கையானவை யன்று. இத்தகைய எல்லைகளைக் கொண்டு

இரு நாடுகள் பிரிந்தால் தொல்லைகள் பல உண்டாகும். எப்பொழுதும் எல்லையைக் காப்பதற்கென்றே துருப் புக்களை நிறுத்தி, செலவுமிக செய்யவேண்டும் என்று டாக்டர் அவர்கள் கூறினார். அவருடைய எச்சரிக்கை, இன்று நமக்கு கண் திறந்திருக்கிறது!

ஜுலை 15ம் தேதி இங்கிலாந்து பாராளு மன்றம் இந்திய சுதந்திரச் சட்டத்தை அமுல் செய்தது. உடனே, இந்திய அசெம்பிளி சுதந்திர அசெம்பிளியாக மாறியது.

காங்கிரஸ் மீது அத்துணை நம்பிக்கை இல்லாது போயினும், பண்டிதர் நேருவின் மீது டாக்டர் அவர் களுக்கும் நல்ல மதிப்பு இருந்தது. டாக்டர் அவர்களை, பண்டிதர், சட்ட மந்திரியாக இருக்குமாறு அழைத்தார். இதுபோன்ற தோர் சுமுக நிலையைக் காணவே கண் குளிர்ந்தது. டாக்டர் அவர்கள் சம்மதித்தார். மஹா சபா தலைவர் டாக்டர் முகர்ஜியும் கூட மந்திரி சபையில் இடம் பெற்றார்.

ஆகஸ்ட் மாதம் 15ம் தேதி இந்தியா பூரண சுதந்திரம் பெற்றது. சுதந்திர இந்தியாவின் முதல் மந்திரி சபையில் டாக்டர் அவர்களும் இடம் பெற்றார். ஆங்கிலேயன் கைபொம்மை என்று அவரை இகழ்ந்த வர்கள் தத்தம் கருத்தை மாற்றிக் கொண்டனர். நாடெங்கும் டாக்டரின் பெருமையையே கொண்டா டினர். மகாத்மாவின் ஆசிகள் டாக்டருக்குக் கிடைத் தன.

ஆகஸ்ட் 29ம் தேதியன்று அசெம்பிளி, டாக்டர் அவர்களை தனி முறையில் கௌரவித்தது. இந்திய

அரசியல் சட்ட (Draft Committee of the Constitution) அமைப்புக் குழுவின் தலைவராக அவர் நியமிக்கப் பட்டார். தாழ்த்தப் பட்டவர் குறைகள் நீங்க என்னென்ன செய்ய வேண்டுமோ அத்தனையும் செய்தார் டாக்டர். நாட்டில் சமூக சமத்துவம் நிலைநாட்ட பாடு பட்ட டாக்டர் அவர்கள், தம் கனவு நனவாகும் நாளையும் கண்டுவிட்டார். பிரபல ஆலயங்கள் தாழ்த்தப் பட்டவருக்காக திறந்து விடப்பட்டன.

நாடெங்கும் இந்து முஸ்லிம் கலகங்கள் மிகுந்தன. ஹைதராபாத் பிரதேசத்தில் தாழ்த்தப் பட்டோர், முஸ்லிம்களின் கோர அட்டூழியங்களில் சிக்குண்டு சிதைந்தனர். டாக்டர் அவர்கள், தம்மவர்களை, முஸ்லிம்களுடன் கைகோர்க்காது, இந்திய அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும், என்று எச்சரித்தார்.

எங்கும் இரத்த வெள்ளம் பெருக் கெடுத்து ஓடியது. 1948ம் வருஷம் ஜனவரி 30ம் தேதி, இந்தியத் தந்தை மகாத்மாஜியை நாத்துராம் கோட்சே சுட்டுக் கொன்றான். டாக்டர் அவர்கள் மனமுடைந்து, காந்திஜியின் சவ ஊர்வலத்தில் கலந்து கொண்டார்.

1948, பிப்ரவரியில் டாக்டர் அவர்கள் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தை முடித்தார். இடைவிடாது உழைத்ததால் அன்னாரின் உடல் நலம் குன்றி விட்டது. பம்பாய் மருத்துவச் சாலையில் அவர் ஓய்வு எடுத்துக் கொள்கையில், டாக்டர் மிஸ். லக்ஷ்மி கபீர் என்பவரை சந்தித்துக், காதலித்து, மணந்து கொண்டார். டாக்டரின் 56-வது வயதில், 1948, ஏப்ரல் 15ம் தேதி இத்திருமணம் நடந்தது. லக்ஷ்மி கபீர் சாரஸ்வத் பிராம்மண வகுப்பைச் சேர்ந்தவர்.

சித்தார்த் கல்லூரியில் மீண்டும் அக்கறை செலுத்தினர் டாக்டர். இது சமயம் மொழிவாரி மாகாணப் பிரிவினைக் கமிஷன் நிறுவப்பட்டது. மகராஷ்டிரத்தைப் பற்றி தமது கருத்துக்களை எழுதி கமிஷனுக்கு அனுப்பி வைத்தார். அவர் மொழிவாரிப் பிரிவினையால் ஏற்படும் நல்லது கெட்டதை எடுத்துரைத்தார். இதுசமயம், அவரது "தீண்டாமை" எனும் புத்தகம் வெளிவந்தது கி. பி. 400 ஆண்டிலிருந்தே தீண்டாமையை கடைபிடித்தனர் என்று ஆராய்சி மூலம் வெளியிட்டார். புத்தகம் வெகுவாகப் புகழப்பட்டது.

1948, நவம்பர், 4ம் தேதி, டாக்டர் அரசியல் அமைப்புச் சட்டத்தை, மக்கள் மன்றத்தில் சட்ட மந்திரி என்ற முறையில், கொண்டுவந்தார். அன்று அவர் நிகழ்த்திய சொற்பொழிவு அனைவர் உள்ளத்தையும் கவர்ந்தது. சட்டத்தின் பதினொன்றுவது பிரிவில் கண்ட, தீண்டாமை ஒழிப்பை, மன்றம் பலத்த கரகோஷத்துடன் அமுலுக்கு கொண்டுவந்தது. அப்போது மன்றத் தலைவராக இருந்த டாக்டர் ராஜேந்திர பிரசாத், அம்பேத்கரை வெகுவாகப் புகழ்ந்தார்.

"1950 ஜனவரி 26ம் தேதியிலிருந்து நம்மிடையே அரசியல் சமத்துவமும், சமூக மற்றும் பொருளாதர தாழ்வு உயர்வுகளும் இருக்கும்" என்று கூறி, நாட்டு மக்கள் அனைவரும் கூடி இந்நிலையை மாற்றி, எல்லாத் துறைகளிலும் சமத்துவம் அடைவதைக் காணல் வேண்டுமென்றார்.

1949, நவம்பர் 26ம் தேதி, இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

மற்றுமோர் மாபெரும் பணி டாக்டருக்கு இருந்தது. இந்து சட்டத் (Hindu Code Bill) தில் மாறுதல்கள் பல செய்ய வேண்டியிருந்தது. இவற்றை செய்து, 1948 அக்டோபர் மாதம் மன்றத்தில் கொண்டு வந்தார். சிலருக்கு மாறுதல்கள் பிடிக்கவில்லை. மன்றத்தில் எதிர்ப்பு மிகுந்தது. மனு, டாக்டர் அம்பேத்கர்—இவ்விருவருக்குமிடையிலிருந்த, வித்தியாசங்களை அனைவரும் கண்டனர். நாடெங்கும் ஆதரவும் எதிர்ப்பும் காணப்பட்டன. நேரு ஆதரித்தார். சர்தார் படேல் எதிர்த்தார். பிப்ரவரி 5ம் தேதி துடங்கிய சர்ச்சை, மூன்று நாட்கள் நடந்தது பின்னர், 1951 செப்டம்பர் நடக்கவிருந்த மன்றக் கூட்டத்திற்கு ஒத்திவைக்கப் பட்டது.

செப்டம்பர், மாதத்தில் 'திருமணங்கள், விவாகரத்துக்கள்' பிரிவைபற்றி சர்ச்சை நடந்தது. மன்ற கட்டிடத்தின் வெளியில் ஆர்பாட்டங்கள் நடந்தன. டாக்டர் முகர்ஜி எதிர்த்துப் பேசினர். காட்கில் ஆதரித்து முழங்கினர்.

பின்னர், 'திருமண—விவாகரத்து' பற்றியவை தனியாக எடுத்துக் கொண்டனர். சூடான வாக்குவாதங்களுக்குப் பின்னர், சட்டத்தின் நான்கு பிரிவினைகள் மட்டும் அமுல் செய்யப்பட்டன.

டாக்டர் அவர்கள் மனமுடைந்து போனர். எனவே செப்டம்பர் 27ம் தேதி மந்திரி சபையினின்றும் ராஜிநாமா செய்து விட்டார். ஆயினும் மன்ற அங்கத்தினராகவும், எதிர் கட்சி தலைவராகவும் பணியாற்றினர்.

அடுத்த பொதுத் தேர்தலில் டாக்டர் அவர்கள் தம்மவருடன் சோஷலிஸ்ட் கட்சியை சேர்த்து கொண்

டார். ஆயினும், பண்டிதர் நேருவின் கருத்துக்கிணங்க மக்கள் தத்தம் ஓட்டுகளைக் கொடுத்தனர். சோஷலிஸ்ட் கட்சியும், டாக்டரும் படுதோல்வி கண்டனர்.

கொலம்பியா பல்கலைக் கழகம் டாக்டருக்கு, 'டாக்டர் ஆப் லா' பட்டம் அளித்து கௌரவித்தது. அமெரிக்காவினின்று திரும்பியதும் டாக்டர் பல்வேறு இடங்களில் சொற் பொழிவாற்றினர். அவர், 'புத்தமதம் ஒன்றுதான் இந்தியாவின் எதிர்காலத்திய புனிதமதம்,' என்று பறை சாற்றலானர் எங்கு நோக்கினும் டாக்டரின் புத்தமதப் பிரசாரமே காணப்பட்டது.

தமது அறுபதாவது வயதை எட்டிப் பிடித்துவிட்டிருந்தார் டாக்டர். இருந்தும், சுறுசுறுப்புடனும், வாலிப மிடுக்குடனுமே அவர் உழைத்தார். அவரது வாழ்க்கை முழுவதும் ஒரு போர்களமாகவே இருந்ததெனலாம். தம் குலத்தவர் நல் வாழ்க்கைக்காக அவர் சுயநலம் பேணுது, இரவு பகலாக உழைத்தார். மாக்கள் போலிருந்த தாழ்த்தப் பட்டோர் மக்கள் போலானதேன்? டாக்டர் அவர்களது தளராத உழைப்பேயாகும்! அவர் துடங்கிய தீண்டாமை ஒழிப்பு இயக்கும் இன்றுகூட இயங்கி, இந்தியாவின் பல்வேறு மூலை முடுக்குகளிலும் தீண்டாமையை ஒழித்து வருகிறது.

நாட்டு மக்கள் ஒன்றுபட வேண்டும்—நாட்டின் பொது எதிரிகளை ஒழிக்க! ஒன்றுபட் வேண்டுமெனின் சமூக சமத்துவம் நிலவவேண்டும். அதற்கு தீண்டாமை ஒழிய வேண்டும். இதுவே டாக்டர் அம்பேத்கரின் கருத்துக் கருவாகும்.

* * *

டாக்டர் அவர்களின் உடற்கட்டு திண்மை பொருந்தியது. அவர் ஐந்தடி ஏழங்குலம் உயரமானவர். 180

பவுண்ட் எடையினர். பரந்த நெற்றியும், உறுதியான தாடையும் அவரது இதயத்திடத்தை அறிவிப்பனவாம்.

டாக்டர் கோபக்காரர். ஒரு சிறிது தவறிழைந்தாலும் கோபங்கொண் டெழுவராம். ஆயினும் சில விஞடிகளுக்குப் பின்னர் அவர் பழைய நிலையை அடைந்து விடுவார்.

நேரத்தை வீணடிப்பதை அறவே வெறுத்தார் அவர். நேரத்தை நல்ல முறையில் கழிப்பதை அவர் கடைபிடித்தார்.

டாக்டர் உணர்ச்சி வசப்படுவதில் புகழ்வாய்ந்தவர். சினிமாப் படங்கள் சிறிது சோகமாக அமைந்தாலும், எழுந்து வந்துவிடுமளவு இளகிய மனம் கொண்டவர்.

'அச்சுத கன்யா,' 'ஆலிவர்ட்விஸ்ட்' போன்ற படங்களை அவர் விரும்பிப் பார்ப்பாராம். சங்கீதப் பிரியர் டாக்டர் அம்பேத்கர். அவரது சங்கீத ஆர்வம், வயலின் கற்றுக் கொள்ளுமளவுக்கு இருந்தது. அவரது அதிசயப் பொழுதுபோகு என்னவெனின், பல தரப் பட்ட பவுண்டன் பேனுக்களைச் சேகரிப்பதயாகும். இதுமட்டுமன்றி அவரது புத்தகங்கள் கணக்கிலடங் காதவை!

அவரது பெரிய 'லைப்ரரி'யை சித்தார்த் கல்லூரிக்கு நன்கொடையாக அளித்துவிட்டார். அவரது வாழ்க்கையை வகுத்த சில புத்தகங்களாவன: ராமாயணம், மகாபாரதம், புத்த சரித்திரம், கபீர் வாழ்க்கை, மகாத்மா பூலேயின் புத்தகங்கள்.

புத்தரும், பௌத்த மதமும் அவர் கருத்தினை

கவர்ந்ததெனலாம். கீதை அவருக்குப் பிடிக்கவில்லை. கீதையின் கருத்துக்களை அவர் எதிர்த்தார்.

வாழ்க்கைப் புயலில், சிக்கிச் சுழன்று, இறுதியில் தாம் விரும்பிய துறை முகத்தையே அடைந்த பெருமை டாக்டர் அவர்களையேச் சாரும். அவரது பெயர் இந்தியச் சரிதத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் படுமென்பதில் வியப்பில்லை.

சுதந்திர இந்தியாவில் மேதைகளின் ஆற்றல்களை உரிய முறையில் கௌரப்பதில் ஊக்கம் செலுத்தினர், ஆள்வோர். இந்திய மக்களின் முன்னேற்றத்திற்கு பாடுபட்ட தலைவர்களை பெருமை படுத்துவதில் முனைந்தனர். அங்கனம் ஆள்வோர் கருத்தில் உயர்ந்தவருள் டாக்டர் அம்பேத்கரும் ஒருவர். 'பத்மபூஷன்' எனும் பட்டத்தை அளித்து, கலிகால மனுவை போற்றியது அரசாங்கம். தாழ்த்தப் பட்டவரின் முன்னேற்றத்திற்கென தமது வாழ்நாள் முழுவதையும் செலவிட்ட அண்ணலின் கனவுகள் நனவாகும் நாட்கள் நெருங்கி வந்தன. இச்சமயத்தில் அன்னாரை அரசாங்கம் பாராட்டியது மிகப் பொருத்தமேயாம்.

டாக்டரின் வாழ்நாளில் மிகமுக்கிய மானதோர் சம்பவம் 1956ப் வருஷம் அக்டோபர் மாதம் 14ம் தேதி நடந்தது.

இப்புத்தகத்தின் பல்வேறு பாகங்களில் டாக்டரின் புத்த மதத்தைப்பற்றிய அபிப்ராயங்களை விளக்கியிருக்கிறோம். உயர்வு தாழ்வு மனப் பான்மைகளில்லாத ஒரு பொது மதத்தின் அவசியத்தை அவர் வெவ்வேறு சமயங்களில் வற்புறுத்தியதையும் கண்டிருக்கிறோம். 'நான்

இந்துவாகப் பிறந்தேன் ஆனால் இந்துவாகவே இறக்க மாட்டேன்' என்று ஆண்டுகள் சிலவற்றிற்கு முன்னர் டாக்டர் அவர்கள் செய்த தீர்மானம் நிறைவேறும் நிலை வந்தேகியது.

தீண்டாமையை பற்றித் தனக்கும் மகாத்மா காந்திஜிக்கும் இடையில் வேற்றுமைகள் பல விருந்தனவென்றும், நாட்டிற்கு பழுது ஏற்படாத முறையைக் கையாண்டு தமது எண்ணங்களை முடித்துக் கொள்வதாக அவருக்கு வாக்குறுதி கொடுத்ததாகவும் கூறி, டாக்டர் அவர்கள், "புத்த மதத்தை நான் தழுவியதின் மூலம் இவ்வாக்கை பூர்த்தி செய்துவிட்டேன்" என்றார்.

நாகபுரியில் நடந்த மாபெரும் பொதுக் கூட்டமொன்றில், அக்டோபர் 14ம் தேதியன்று புனித உ. சந்திரமணி மஹாஸ்தவிரா எனும் புத்த பிக்ஷுவால் மதம் மாறினார்கள் டாக்டர் அம்பேத்கர் தம்பதிகள். சங்கத்தில் சரண் புகுந்த அவர், பின்னர் பேசுகையில், கூட்டத்தில் எவர் விரும்பினாலும் புத்த மதத்தை உடனே தழுவி பயன்பெறலாம் என்றார். அவரது அறை கூவலுக்கிணங்கி சுமார் அரை கோடி மக்கள் மதம் மாறினர். இந்திய சரித்திரத்தில் மிக முக்கியமானதோர் நிகழ்ச்சியென வல்லுனர்கள் கூறுவர். புத்த மதம் ஹரிஜனங்களின் மதமாகவே இராமல், அனைவரின் மதமாகவும் இருக்கவேண்டும், இருக்கமுடியும் என முழங்கினார் அவர். நாடு முழுவதும் மக்கள் புத்தரின் அடிபணியும் நாள் விரைவிலேயே வருமென திட்டவட்டமாக மொழிந்தார் அம்பேத்கர். கூட்டத்தில்

அவரைத் தொடர்ந்து பல்வேறு தலைவர்களும் மதம் மாறினர். அதுமட்டுமன்றி, 26ம் தேதியன்று இரண்டாயிரம் மக்கள் அகோலா நகரில் மதம் மாறினர்.

டாக்டரின் மதமாற்றம் அரசியல் தலைவர்கள் பலரின் எதிர்ப்பை பெற்றது. இந்திய பத்திரிகைகள் அவரது செயலைக் கண்டித்து எழுதின. டாக்டரின் மதமாற்றம், சீர்த்திருத்தம் செய்ய முயன்று தோல்வி கண்ட ஒருவர் செய்ய வேண்டியப் பேடிச் செயல் என்று வரைந்தன. ஆனால் டாக்டர் அவர்கள், இந்துமதம் ஒரு பழங்கோட்டை என்றும், அக்கோட்டையைப் பழுது பார்ப்பதில் யாதொரு பயனும் கிடையாதென்றும், கோட்டை தகர்ந்து அதனுள் இருக்கும் மக்கள் பாழாக்கு முன்னர் வேறு உறுதியான புகலிடம் செல்வதே முறை என்றும் பதிலிறுத்தார். பலரால் போற்றப் பட்டும், ஏனையோரால் இகழப்பட்டும், டாக்டர் அவர்களின் பெயர் பத்திரிகைகளில் முக்கியத்வம் பெற்றது. இங்கிலையில் தான் நாட்டு ஹரிஜனங்கள் எதிர்பாராத திடீர் சம்பவம் ஏற்பட்டது!

1956ம் வருஷம் டிசம்பர் மாதம் ஆறும் தேதியன்று டாக்டர் அம்பேத்கர் காலமானார். நாடெங்கும் இறங்கல் கூட்டங்கள் நடைபெற்றன. அறிஞர் உலகம் ஒரு சிந்தனைச் சிற்பியை இழந்தது. தாழ்த்தப் பட்டவரின் மன்றம் ஒரு சீர்த்திருத்தவாதியை இழந்தது. கண்ணீர் விட்ட தீண்டப்படாதோர் கணக்கிலடங்காதவர். அவரது அரும்பெரும் செயல்களை புகழ்ந்து நாடெங்கும் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன.

---

**" ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும்**
**அசைவிலா ஊக்க முடையா னுழை "** எனும்

வள்ளுவர் வாக்கை மெய்பித்த பெருந்தகையாளர் டாக்டர் அம்பேத்கர். அவர் வாழ்க்கை ஏட்டிலிருந்து நாட்டினர் அறிந்து கொள்ளக்கூடிய உண்மைகள் பல வாகும். மிகமிகத் தாழ்மையான நிலையில் பிறந்து, தமது ஊக்கத்தின் விளைவால் மிகமிக உயர்நிலை அடைந் தவர் அவர். முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார் என்பதற்கிணங்க தாம் மேற்கொண்ட செயல்களனைத் திலும் வெற்றிகண்டவர் டாக்டர். தம் குலத்தவர் மேம்பாட்டில் கவனம் செலுத்தி அவர் தம் குறைகளைத் துடைக்க பாடுபட்டவர். திண்மையுள்ளமும், எவர்க் கும் அஞ்சாத நெறியும் கொண்டு, லட்சியத்தைக் கை விடாத சத்திய சீலர் என்று அவரது எண்ணிலடங்காத சீடர்கள் சொல்லுவர்.

தாழ்த்தப்பட்டவருக் கென அவர் புரிந்த தொண்டு கள் ஒருபுறம் இருக்க, இந்தியக் குடியரசு அமைய அவர் செய்த சேவைகள் எண்ணி மகிழ்தற்குரியனவாம். மேனாடுகளில் சென்று பெற்ற அறிவுச் செல்வத்தை நம் நாட்டுப் பணியில் செலவிட்ட டாக்டரின் பெருந் தன்மையை என்னென்பது ?

கல்வித்துறை, அரசியல், பொருளாதாரம், சமூகம் ஆகிய அனைத்திலும் பெருங்கவனம் செலுத்தி புகழ் பெற்ற அவர் நம் நாட்டுச் சுதந்திரச் சிற்பிகளுள் ஒருவர் எனத் திண்மையாகக் கூறலாம்.

டாக்டர் பீம்ராவ் அம்பேத்கரின் அகால மரணம் வருந்தப்பட வேண்டிய விஷயம். மேலும் நம் நாட்டு

மக்களுக்கு பணிசெய்ய முடியாது, திடீரென மறைந்து விட்டது, தாழ்த்தப்பட்டவரின் பெரும் துரதிருஷ்டம் என்றே சொல்லலாம்.

உரிமைக் குரலெழுப்பிய சிங்கம் மறைந்துவிட்டது, ஹரிஜனங்கள் மேம்பாட்டின் வேகத்தை தளர்த்தியது. தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த, தன்னல மற்ற தியாகியாம் டாக்டர் அம்பேத்கருக்கு அஞ்சலி செய்கிறோம்.

அன்னார் துவங்கிய சீர்த்திருத்த செயல்கள் பூரண பொலிவுபெற்று, அன்னார் கனவுகளனைத்தும் கைகூட இறைவனை வேண்டிக்கொள்கிறோம்.

ஜெய் ஹிந்த்

The Jupiter Press, Balepet, Bangalore 2.

